## உள்ளுறை

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 15 | குரோதி-ளு ஐப்பசி திங்கள் 1-ம்வ [17-10-64] | இதழ் 10

கல்லாடம் :

# குழந்தை அன்பு

திரு. பொ. முத்தரசு அவர்கள், M. A., B. T.,
தமிழ்த்துறைத் தலைவர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கல்லூரி,
அருள்நந்திநகர் – ஸ்ரீவைகுண்டம்,



கல்லாட நூலின் பாயிரப் பகுதியில் பிள்ளையார் வணக்கத்தை யடுத்துக் காணப்படுவது முருகப்பெருமான் வணக்கம். இதுவும் முதற்பாடலைப் போலவே கல்லாடனுர்க்கே உரிய தனித்தன்மையோடு விளங்குவது; முருகப்பெருமானது மறக்கருணையையும், அறக்கருணையையும் திறம்பட எடுத்து இயம்புவது.

அவரது பொருள்சேர் புகழை, எழிலொடு பொலிந்து கருத்தை ஈர்க்கும் எதுகை, மோனை, முரண் தொடைகளும், உவமை நயங்களும் அமையத் தொடுத்து மொழிவது. பொருட்செறிவு வாய்ந்த சொற்கள், கல்லாடனரது எண்ணப் போக்கிற்கும் ஏவலுக்கும் இசைய எத்துணைப் பேரழகோடு இழைந்து வருகின்றன என்பதைப் பாடலில் கண்டே மகிழ்தல் இயலும்.

முருக வழிபாடு:

'முருகனே தமிழ்; தமிழே முருகன்' என்னும்படியாகத் தமிழோடு இணைந்து கலந்து ஒன்றித் தமிழே வடிவானவன் முருகப்பெருமான். தொல்காப்பியம் முதலாக, இவ்விருபதாம் நூற்றுண்டில் தோன்றிய நூல்கள் ஈருக எல்லாவற்றிலும் முருகப்பெருமான் புகழ் உரிய இடங்களில் யாவராலும் உள்ளம் குழைந்து போற்றப் பெறுகின்றது. முருகு என்பது உயரிய பண்புகள் அனைத்தையும் தன்னகத்துக் கொண்ட தலையாய பண்பு; இறைமைப் பண்பு. அவையனைத்தையும் உடையவன் முருகன். அவனை எத்தனையோ வகைகளில் கண்டுணர்ந்து தமிழ்ச்சான்றோர் போற்றியுள்ளனர். தாம் பெற்ற இன்பத்தை யாவரும் பெற்று மகிழத் தீந்தமிழில் வடித்தும் தந்துள்ளனர். அங்ஙனம் அமைந்த பாடல்களுள் ஒன்றே இதுவும்.

உயிர்கள் இன்பத்தை நாடுகின்றன. உலகத்தில் ஒவ்வொரு வகை இன்பம் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோர் இடத்தில் கிடைக்கும். அவ்வின்பமும் கணத்தில் தோன்றி, நின்று, அழிவது. எனவே உயிர்கள் என்றும் நிலைக்கும் இணையற்ற இன்பத்தை எதிர்நோக்கி அதனை அடைய அவாவுகின்றன. அத்தகைய இன்பமலையாக இலங்குபவன் முருகப்பெருமான். சுருங்கக் கூறின்,

> பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
> பக்கநின்று கேட்டாலும் பரிந்துள்உணர்ந் தாலும்
> ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டிஅணைத் தாலும்
> இத்தனைக்கும் தித்திக்கும் இனித்தசுவைக்

கரும்பாகக், கற்கண்டு மலையாக இருக்கின்ருன். அவன் பேரருளை இங்ஙனமெல்லாம் ஆரத்துய்க்கும் மனிதன் தான்

பெற்ற இன்பத்தைச் சொல்லிச் சொல்லி மகிழ்கிருன். முற்றவும் சொல்ல இயலாது என்பதைக் கண்டும், ஏதோ இயன்றவரை சொல்லி இன்புறுவதில் அவன் காணும் மகிழ்ச்சியே தனிமை வாய்ந்ததுதான். மாற்ற மனங்கழிய நின்ருெளிரும் அம் மாண்பினனை வாயாரப் பல பெயர்களைச் சொல்லிப் பாடி மகிழ் கிருன்; போற்றி வணங்குகிருன். "வேண்டிய வரங் கொடுப்பான், மெய்கண்ட தெய்வம் இத் தெய்வ மல்லால் புவியில் வேறு இல்லை" என்று குமரகுருபர சுவாமிகள் அருளியிருப்பது போல, அவனை வணங்கித் திளைக்கும் வாழ்வில் செம்மாந்து வீற்றிருக்கினருன்.

### அன்பு நெறி:

இவ்வாறு "யாமார்க்கும் குடியல்லோம்; யாதும் அஞ் சோம்; எங்கெழில் என் ஞாயிறு எமக்கு" என்று செம்மாந்து வீற்றிருக்கும் இன்பத்துக்குக் காரணம் ஆவது அன்பு. அன் புள்ள இடத்தில்தான் இன்பமும் உண்டு. இன்பமும் அன்பும் காரண காரியத் தொடர்புடையன. இது குறித்தே அருளா ளர்கள் இறைவனை "இன்பமே என்னுடை அன்பே!" என்றும், "பத்தி வலையிற் படுவோன் காண்க" என்றும், "அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே" என்றும் கூறியுள்ளனர். இவற்ருல் இறைவன் இன்ப வடிவினன் என்பதும், அவனை அடையும் நெறி அன்பே என்பதும் தெற்றெனப் புலனுகும். அவ்வன்பில் முகிழ்த்த அருந்தமிழே கல்லாடனுர் பாடல்.

### பாடற் பொருள்:

இப்பாடலின் முற்பகுதியில் முருகப்பெருமான், நல்லாரைக் காக்கும் பொருட்டுச், சூரபதுமனை வென்று திருத்தி மயிலூர்தி யாகவும், சேவற் கொடியாகவும் ஆட்கொண்ட வரலாற்றைக் கல்லாடனுர் விரித்தோதுகின்ருர். இதனுள் "கீழ்இணர் நின்ற மேற்பகை மாவின்" வெருவரு தோற்றம் ஓர் அழகிய சொல் லோவியமாகத் தீட்டப் பெற்றுள்ளது. வேலால் பிளக்கப்பட்டு மயிலாக மாறிய சூரன் கவ்வித்தூக்கிய ஆதிசேடனுகிய பாம்பின் வாய்தொறும் நாகமணிகள் சிந்தின என்பதும், அவனது மற்ருெரு கூறு சேவலாய் விண்ணகத் தெழுந்து, வானவர் நடுங்க, அண்ட வெளியிலுள்ள மீன்களைப் பொரிகளைப் போலக்

கொறிக்கத் தொடங்கியது என்பதும் இறும்பூது விளைக்கும் ஆற்றல் வாய்ந்த வருணனைகள். இத்தகைய பேராற்றலும், பெருவடிவும் கொண்ட மயிலை ஊர்தியாகவும், கோழியைக் கொடியாகவும் முருகப்பெருமான் கொண்டருளினன் என்பது அவனது எல்லாம் வல்ல முழுமுதல் தலைமைக்கும், வரம்பில் ஆற்றலுடைமைக்கும் தக்கதோர் எடுத்துக்காட்டாய் இலங்குவ தோடு அவனது மறக்கருணையின் மாண்பையும் புலப்படுத்து கிறது.

“பெம்மான் முருகன் பிறவான் இறவான்” ஆயினும் அன் பொடு வேண்டுவார்க்கு எளிவரும் கருணையாளன். எனவே தேவர்கள் வேண்டக், கார்த்திகை மாதர் அன்புக்கு எளிவந்து தாமரைப் பொய்கையில் குழந்தைகளாகத் தோன்றி, அவ்வறு வரிடமும் அமுதமுண்டதும், நாரதன் வேள்வித்தீயில் தோன்றிய ஆட்டுக்கிடாயை ஊர்ந்து விளையாடியதும், தேவயானை, வள்ளி யம்மை ஆகியோரை மணந்தருளியதும், செருக்கால் உந்தப்பட்ட நான்முகன், “ஓம்” என்னும் மறை முதன் மொழிக்கு மெய்ப் பொருள் உரையாது “நானே பிரமம்” எனப் பேச, அவனைக் குட்டிச் சிறையிலிட்டதும், பின்னர்த் தேவரும், மூவரும் யாவரும் கூடி வேண்ட அவனை விடுவித்ததும் சுவைபெற இதனுள் விளக்கப் பெற்றுள்ளன. எவ்வகைப்பொருளும் ஆசிரிய முகத் தான் முறைப்படி உணர்ந்தால் மட்டுமே பயன் விளையும், என்னும் பொய்தீர் ஒழுக்க நெறியை உயிர்களுக்கு எடுத்துக் காட்டும் பான்மையில்

> உழல்மதில் சுட்ட தழல்நகைப் பெருமான்
> வணங்கிநின் றேத்தக் குருமொழி வைத்ததும்
> ..........................................................................
> குறுமுனி தேற நெடுமறை விரித்ததும்

எழில்பெற இயம்பப் பெற்றுள்ளன. இறுதியாக நினைப்பவர் மனமே கோயிலாகக் கொண்டு, ஆறுதிரு எழுத்தும் அன்பொடு கூறுவார் நெஞ்சக் குடிசையில் வலியச் சென்று பொலிந்தருள் செய்யும், அருமையில் எளிய அழகு வியந்து போற்றப் பெறு கிறது. குமரகுருபரர் வாய்மொழியாகிய

ஆறு திருப்பதிகண் டாறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே

என்பதும் ஈண்டு ஒப்பு நோக்கி இன்புறுதற் குரியது.

எல்லாவற்றுக்கும் மேலாக, அவன் தலைச்சங்கத்தில் புலவனாக வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்ததும், செந்தமிழ் நூல்விரித்த சிறப்பும், முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைக்கும் மாண்பும், கல்லாடனாரது சிந்தையில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வதனை நாம் அறிந்து கொள்ளும் வண்ணம், அவனைப் பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவனாகக் கண்டு, நாமும் காணக்காட்டும் திறம், வியத்தொறும் வியத்தொறும் வியப் பிறந்து நிற்கும் இயல்புடையது. இங்கு இவர் குறிக்கும் கதையினை ஆராய்ச்சியாளர் புறக்கணிப்பர். மேலும் குமாரக் கடவுளுக்குச் சாபம் நேர்ந்தது என்பதும், அதனால் அவர் உருத்திர சன்மன் என்ற ஊமைப் பிள்ளையாய் மணிவணிகர் மரபில் தோன்றினார் என்பதும் கற்பனை எனலாமே யன்றி உண்மையெனக் கொள்ளுமாறு இல்லை. ஆயினும் 'இறையனார் களவியலுக்கு' ஆசிரியர் நக்கீரனார் எழுதிய உரையின் தெய்வ நலத்தைப் பாராட்டு முகத்தான் இக்கதை எழுந்தது என்று கொள்ளுதலில் தவறில்லை என்பர். அன்றியும் ஆசிரியர் நக்கீரரது திருமுருகாற்றுப் படையில் வரும் "நூலறி புலவ", "பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே" என்னும் தொடர்களோடு ஒப்புமையுடையது இத்தொடர் என்று எண்ணுதலும் பொருத்தமுடையதே.

புலவர் வேண்டுகோள் :

பெருந்தமிழ்க் காதலனாயும், அருந்தமிழ்ப் புலவனாயும், புலவர் அவையுள் அமர்ந்து தமிழாராயும் முருகப் பெருமானது அளப்பரும் கருணைத் திறத்தை உன்னி உன்னி அவன் திருவடிகளைப் போற்றும் கல்லாடனார் தாம் மேற்கொண்ட கருத்து முற்றுப்பெற அருள் புரிய வேண்டுவார்,

வெட்சிமலர் சூழ்ந்த நின்இரு கழற்கால்
குழந்தை அன்பினேடு சென்னிதலைக் கொள்ளுதும்

என்று பரவுகின்ருர். ஏன்? குழந்தை அன்பே இயற்கை யன்பு; கள்ளங் கபடற்ற தெளிந்த அன்பு; இறவாத இன்ப அன்பு; இறையருளுக்குகந்த அன்பு. அவ்வன்பே குழந்தைக் கோலத்திலும் இருந்து அருள் செய்யும் முருகப்பெருமான் வேண்டுவது. அத்தகைய அன்பர்க்கு அருளவே அவர் ஒடோடியும் வருகிருர். தம்முடைய அணங்குசால் உயர்நிலையை அடக்கிக் கொள்ளுகிருர். அவ்வன்பர் எண்ணிய வண்ணமே மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி அருள் செய்கிருர். அவ்வன்பர் மீதும், அவர் பாடும் தமிழ் மீதும் கொண்ட காதலால் அல்லவா, "கோழியைப் பாடும் வாயால் குஞ்சைப் பாடமாட்டேன்" என்று சொன்ன இறுமாப்புடைய பொய்யாமொழிப் பகைஞர்க்கும் அருள் செய்து, குஞ்சினும் சிறிய முட்டைப் பெயர் தாங்கிப் பாடல் பெற்று மகிழ்கிருர். அத்தகைய பெருமை சான்ற குழந்தை அன்பொடு பாடும் கல்லாடர், மிக்க பணிவுடன், தம் மொழிகளை "அறிவுநிலை கூடாச் சின்மொழி" என்று கூறுவதோடு, அவற்றை ஏற்று அருள்செய்து உயிர்குற்றமாகிய அவாவினல் நேரும் எண்ணற்ற பிழைகளை எல்லாம் முடித்தொழிக்கவும், எடுத்துக்கொண்ட நூலை இனிது நிறைவேற்றி வைக்கவும், இறுதியில் தமக்கு மீளாக் காட்சியாகிய பிறவா நிலையை அருளவும் வேண்டும் எனப் போற்றிப் பரவுகிருர்.

வெட்சிமலர் சூழ்ந்த நின்இரு கழற்கால்
குழந்தை அன்பிஞெடு சென்னிதலைக் கொள்ளுதும்
அறிவுநிலை கூடாச் சின்மொழி கொண்டு
கடவுள் கூறு உலவா அருத்தியும்
சனனப் பிழையும் தள்ளாக் காமமும்
அதற்படு துயரமும் அடைவுகெட் டிறத்தலும்
தென்புலக் கோமகன் தீத்தெறு தண்டமும்
நரகொடு துறக்கத்து உழல்வரு பிழையும்
நீளாது இம்பரின் முடித்து
மீளாக் காட்சி தருதிஇன் றெனவே.

---

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 15. இதழ் 9-ன் தொடர்ச்சி

## YOGA

### The Yoga way also leadth to Realisation
### யோக நெறியாலும் இறைவனை அடையலாகும்

39. நெறிவழியே சென்று, நேர்மையுள் ஒன்றித்
தறியிருந் தாற்போல் தம்மை யிருத்திச்
சொறியினும், தாக்கினும் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே.

They course the Kundalini through centres six,
To singleness of aim direct the mind,
Unto a wooden stake they sit immobile,
Inpervious to tickle or to thrust,
-To the wise yogins who thus set their purposehigh,
The Lord may His Grace granteth.

ஆருதார வழியே குண்டலினி சத்தியைச் செலுத்தி, சிந்தையை ஒரு நெறிப்படுத்தி, தூண்போல் அசையாது உடலை அமைத்து, சொறிந்தாலும் அடித்தாலும் சற்றும் உணராத நிலையினை எய்தி, யோகம் பயில்கின்றவர்கள் இறைவனை அடைதலாகும்.

## God is Timelss Eternity in Yoga

### யோக உணர்விலே இறைவன் ஆதியந்தமில்லாதவன்

40. ஊழி தோறூழி உணர்ந்தவர்க்கல்லால்
ஊழி தோறூழி உணரவுந்தாரெட்டான்;
ஆழி அமரும் அரிஅயன் என்றுளார்
ஊழி முயன்றும் ஒருச்சி யுளானே.

Unless thou have realized Him as Timeless Eternity
Thou Knoweth Him not, albeit through aeons and aeons of Time;
The Gods-Hari of the Ocean bed and Aya, the creator-
In Vain have sought Him through countless vista of Time
-He is at the pinnacle, beyond their reach.

கற்பங்களைக் கடந்த அவன் தன்மையை உணர்ந்தவர்க்கல்லது, கற்பகாலங்கள் தேடினலும் அவனை அடைதற்கரிது. பாலாழியில் துயில் கொள்ளும் திருமாலும், படைப்பினைச் செய்யும் பிரமனும் எத்தனையே ஊழிகளாக அவனைக்காண முயன்றும், அவன் அவர்களுக்கு எட்டாத உச்சியிலேயே இருக்கின்ருன்!

## The Yogin realizes God within

### யோகி தன்னுள்ளே இறைவனை உணருகிருன்

41. பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது;
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே.

As from within the flower,
The hidden fragrance wakes to life,
So doth out of Jeeva blossom
Siva's divine grace;

Sitting unmoved like painted picture
The yogi realiseth Him within
Unto the Lord is He like planted pole
Which the musk cat embraceth, its fragrance to shed.

மலரினின்று மணம் வெளிப்படுவது போல, சீவனில் நின்று பக்குவ காலத்தில் சிவம் வெளிப்படுகின்றது. அசையாத சித்திரம் போல் அமர்ந்திருந்து, சிந்தனையை சிவத்தின்பால் செலுத்துவோர்கள், புனுகுப்பூனை அணைந்து உராய்ந்து கொள்ளும் கோல் போல் இறைவனுக்கு அமைகின்றார்கள்.

குறிப்பு: நாவி – புனுகுப் பூனை.

## Seek God Within thee

### உன்னுள்ளே இறைவனைக் காண்க

42. உய்ந்தனம் என்பீர், உறுபொருள் காண்கலீர்;
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை யுறவே தெளிந்திருள் நீக்கினால்
முந்தைப் பிறவிக்கு மூலவித்தாமே

Thou sayest, "I have realised God"
Yet have thou not seen Him that is but within thee
Nandi abides subtle as the fragrance within the flower,
Seek Him in the singleness of thy thoughts
Then shalt thine darkness of Impurities vanish
The darkness that is the seed of interminable birth and rebirth.

"நாங்கள் வீடு பெற்றோம்" என்கிறீர்களே; உங்களுள்ளேயே இருக்கும் உயர்ந்த வீட்டுப் பொருளைக் காணத்தவறிவிட்டீர்களே. மலரில் மணம் அடங்கியிருப்பது போல் நந்தி உம்முள்ளே இருக்கின்றான்; அவனை ஒருமையுடன் உணர்ந்து மல இருளை நீக்கிக் கொள்ளுங்கள். அதுவே அனாதியாக வரும் பிறவியின் வித்தாக அமைந்துள்ளது.

## Yoga shows the Way

### யோக நெறி வழிகாட்டும்.

43. எழுத்தொடு பாடலும், எண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியும் நீங்கா;
வழித்தலைச் சோமனோடு, அங்கி அருக்கன்
வழித்தலைச் செய்யும் வகையுணர்ந்தேனே.

Neither mantra, nor song, nor the arts sixty and four
bound ever and birth and its accursed bonds;
Then did I take to yoga's way,
And lo! met within me the Sun, Moon and Fire on [the way
And they showed the Supreme Way!

மந்திரங்களாலும், தோத்திரங்களாலும், அறுபத்து நான்கு கலைத்திரளின் அறிவினாலும் வெறுத்தற்குரிய கொடிய பாசத்தால் வரும் பிறவியை நீக்க வொண்ணாது; எனவே இடகலை பிங்கலை சுழுமுனை வழியாக மூச்சைச் செலுத்தி உடலுள்ளே இறைவனைக்காணும் யோக நெறியைப் பற்றலானேன்.

குறிப்பு: *1 வரி. எழுத்து – மந்திரம்.*
*பாடல் – தோத்திரம்.*
*2 வரி. பழித்தலை – பழியை விளைக்கின்ற முதன்மையான*
*3 வரி. வழித்தலை – தலைவழி – பிரம்மாந்திரம் நோக்கி குண்டலினி செல்லும் வழி.*
*சோமன் – சந்திரநாடி – இடகலை.*
*அருக்கன் – சூரிய நாடி – பிங்கலை*
*அங்கி – சுழுமுனைநாடி –*
*4 வரி. வழித்தலை – தலையான வழி – யோக நெறி.*

## The Fruits of Yoga

### யோக நெறியின் பயன்கள்

44. விரும்பி நின்றே செயின் மெய்த்தவராகும்
விரும்பி நின்றே செயின் மெய்யுரையாகும்
விரும்பி நின்றே செயின் மெய்த்தவமாகும்
விரும்பி நின்றே செயின் விண்ணவனாகுமே.

Do thou in devotion practise yoga
Thou shalt a true tapaswi become;
Thou shalt the True word realize;
And of certain, be one with Heavenly Beings;
Yoga devoted is penance true.

ஆர்வத்தோடு யோக நெறி பயில்வீராகில், அரிய தவத்தினராவீர்; உண்மை உபதேசம் உணரப்பெறுவீர்; விண்ணகத் தேவருமாவீர்; யோகமே மெய்த்தவமாம்.

(தொடரும்)

# பேரின்பப் பழங்கடல்

திரு. பொ. முனியப்பன் அவர்கள்,
தலைமை ஆசிரியர், குண்டடம் ஊராட்சிக்
கூட்டுமன்றத் துவக்கப்பள்ளி, மேற்கு சடையபாளையம்,
கோவை மாவட்டம்.



கடல் தோன்றிய வரலாறு:

'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொரு'ளான முழுமுதற் கடவுளின் அருளால் முகிழ்த்த இஞ் ஞாலத்தில், வரலாற்றால் வரையறுக்க முடியாத ஒரு காலத்தில், அலையும் பெரு வெள்ளமாகிய முந்நீர் என்னும் முதுபெருங்கடல் தோன்றியது. இன்றைய அறிவியலின் திறத்தால் 29 விழுக்காடு நிலம் என்றும், 71 விழுக்காடு கடல் நீர் என்றும் தெரிகின்றோம். இங்ஙனம் கடலின் அளவு கூறிய அறிவியலார் அதன் பிறப்பையும் அறிவித்துள்ளனர். நாம் பெற்ற பெரும் பேறால் நமது தமிழகத்தில் தோன்றிய மாணிக்கவாசகரும், கடல் தோன்றிய வரலாற்றைக் கட்டுரைத்துள்ளார். அறிவியலார் அறிவித்துள்ளதை அறியுமுன் மாணிக்கவாசகர் கட்டுரைத்த கடலின் பிறப்பைக் காண்போம்.

மாணிக்கவாசகர் கூறியது:

> "பரமானந்தப் பழங்கடல் அதுவே
> கருமா முகிலிற் றோன்றி"

திருவண்டப் பகுதியிலுள்ள இவ்வடிகளுக்கு, 'இறைவனும் இறைவியும் ஒருங்கு கூடி உயிர்கட்குச் செய்யும் பேரருள் பேரின்பமான பழங்கடல் என்றும், அக்கடல் முழுதும் முகிலாய்த் தோன்றி, பின் பொழிவது என்றும், அங்ஙனம் எல்லை

யில்லாது அருண்மழை பொழிந்த காரணத்தால் ஐம்புலக்கட்டு கள் யாவும் அழிந்தன' என்றும் இன்ன பிற இடர்கள் யாவும் இரிந் தோடின என்றும் இயலுரை வகுத்துள்ளார் தமிழ்க் கடலா கிய மறைமலையடிகளார்.

நாம் நமது உடலில் பெற்றுள்ள கண் கொண்டு காண முடியாத இறைவனின் பேரின்பப் பழங்கடலை விடுத்து, நமது கண்களால் காணத்தக்க கடலின் பிறப்பை இவ்வடிகளினின்றும் காணுவோம்.

இறைவனின் பேரருளாகிய கடல் எல்லை யற்றது. அது போல் இன்று நாம் காணுகின்ற கடலும் முழுதும் அதனை ஒத்தது இல்லை என்றாலும் எல்லையற்றதே. இறைவனது பேரரு ளாகிய கடல் முழுவதுமே முகிலாகி அருண் மழை பொழிந்து கொண்டே இருப்பது. நாம் காணுகின்ற கடலோ சிறிது முகிலாகி, பின் அதுமட்டும் பொழிவது. எனவே நாம் காணு கின்ற கடலும் கடவுளின் அருளால் தோன்றிய காலத்தில் முழுதும் முகிலிலிருந்தே பிறந்தது என்னும் தெளிவை இவ் வடிகள் தெரிவிக்கின்றது. இது விளக்க முறுவதற் கேற்பவே ''பழங்கடல் — 'அதுவே' — கருமா முகிலிற்றோன்றி'' என்றதன் மூலம் இனிது பெறவைத்தார் ஏற்றமிக்க அறிவுக் கடலாகிய மாணிக்க வாசகர்.

### அறிவியலார் கூறுவது

ஞாயிற்றினின்றும் பிய்த்துக் கொண்டு வந்த பூமி கட்டுப் பாடற்ற வேகத்திலே சுழன்று கொண்டிருந்தது. ஆண்டுகள் பல கழிந்த பின் 'வாயு'த் தோற்றத்தில் இருந்த பூமியின் மேற் பாகம் சிறிது இறுகிய நீர்ப்பொருளாயிற்று. அப்போது ஞாயிற்றின் ஈர்ப்புத் தன்மையால் பூமியின் மேற்பகுதியில் உள்ள பலபாகங்கள் பிய்த்துக் கொண்டு சென்றன. (இங்ஙனம் பிய்த்துச் சென்ற பகுதியே நிலவு எனக் கூறுவாரும் உளர். எனினும் இது இன்னும் தெளிவான முடிவு பெறவில்லை.) அதனால் பூமியில் மாபெரும் பள்ளங்கள் ஏற்பட்டன. நிலவு தோன்றிய பின் பூமி மிகவும் குளிர்ந்து இறுகியது. ஆயிரக் கணக்கான

ஆண்டுகள் கழிந்த பின் குளிர்ந்த பூமியின் மேற்பாகம் படை படையான முகில்களாகி வானத்திலே உலவின. பின்னும் பூமி குளிர்ந்தது. அதனுல் வானத்திலே உலவிய முகில்களும் நீரைப் பொழிந்தன. ஆண்டுக் கணக்கில் இடைவிடாது கொட்டிய பெருமழை நீர் பூமியின் உப்புச் சத்தைக் கரைத்துக் கொண்டு, முன்பு தோன்றிய பெரும் பள்ளங்களைச் சென்று சேர்ந்து, இன்றிருக்கும் கடலாக உருக்கொண்டது.

முகில்களினின்றுமே கடல் பிறந்தது என்னும் வரலாற்றை மாணிக்கவாசகரைப் போன்றே அறிவியலாரும் அறிவித்துள்ளனர்.

திருவாசகமும் திரைகடலும்.

கடல் பிறந்த வரலாற்றைக் கூறிய திருவாசகம் எழுபத்து நான்கு கடல்களைத் தன்னகத்தே கொண்டது. அந்த எழுபத்து நான்கு கடல்களுள்:- இறைவனது பேரருளையும், பெருமையையும் கடலுக்கு உவமித்து, கடலையும், கடவுளையும் இணைத்துக் கூறியவையாய் உள்ளவை முப்பது. கடலைத் துன்பத்திற்கு உவமையாகக் கூறியது ஒன்பது. பிறவிக்குக் கடலை உவமித்துக் கூறியவை நான்கு. தனது இறையுணர்வினை கடலோடு இணைத்துக் கூறியனவாய் மூன்று. அலைகடலில் மீன் பிடிப்பவனுய், சிவன் சென்ற வரலாற்றைக் கூறுவது மூன்று. உமா தேவியார்க்குக் கடலை இணைத்துக் கூறியவையாய் ஒன்று. கடலினின்றும் எழுந்த நஞ்சினை உண்ட வரலாற்றை உரைப்பனவாய் உள்ளவை எட்டு. ஆழி சூழ் உலகம் என உள்ளவை மூன்று. 'அலைகடல் சூழ் இலங்கை வேந்தன்' என இருப்பன இரண்டு. திருமாலையும் கடலையும் இணைத்து இருப்பனவாய் ஐந்து. கல்வியையும், பக்தியையும், காமத்தையும் கடலுக்கு உவமித்து முறையே ஒன்றென்று. முக்கண்களுடைய முழுமுதற் கடவுளை வழிபடுவதன் மூலம் அவ்விறைவன் நமக்கு வழங்கும் 'பேரின்பப் பழங்கடல்' பற்றி மொழிபவை மூன்று.

இந்த எழுபத்து நான்கு கடல்களுள் ஏனைய வற்றை விடுத்து இறுதியில் இயம்பிய பேரின்பப் பழங்கடல் சென்று சேரும் பெரு நெறியைக் காண்போம்.

## பேரின்பப் பழங்கடல்.

'கற்பாந்த காலங் கடவாக் கடல் கடக்கத் தெப்பமாய்' வந்த திருவாசகத்தின் கண், திருவண்டப் பகுதியில் பேரின்பப் பழங்கடல் என்பது எது? அது எப்படிப்பட்டது? என்பதை இனி தாக விளக்குகிறுர். எனவே, முதலில் அப்பேரின்பப் பழங் கடலைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

> " குவளைக் கண்ணி கூறன் காண்க
> அவளுந் தானும் உடனே காண்க
> பரமா னந்தப் பழங்கடல் அதுவே."

இவ்வடிகளின் மூலம், இறைவனும் இறைவியும் இணைந்து, இரண்டறக் கலந்து இருக்கும் பேரருள் நிலையே இறைவழி நின்ற உயிர்கள் சென்றடையும் இறுதி நிலை என்பது இனிது பெறப் படுகின்றது.

அன்போடு இறைவனைப் பற்றும் அனைவர்க்கும் அந்த இறைவனிடமிருந்து பிறக்கும் அருளானது நாம் காணும் முகில் போலல்லாது, கடல் முழுவதுமே முகிலாகி எப்பொழுதும் மாறுது, குறையாது, நிலையாகப் பொழிந்துகொண்டே இருப்பத ஞல் அது 'பேரின்ப கடல்' எனப்படுவதாயிற்று. இறைவனது எல்லையற்ற பேரருளால் உயிர்கள் பெறும் எல்லையற்ற பேரின் பத்தை விளக்கவே இறைவனது அருள், எல்லையற்ற கடலோடு இணைக்கப்பட்டது.

இந்தப் பேரின்பக் கடல், பேரின்பப் பழங்கடல் என ஏன் அழைக்கப்பட்டது?

இறைவன் என்னும் கடல், அருள் என்னும் முகிலாகி, உயிர்களின் ஒருமையுணர்வுள்ள அன்புள்ளம் என்னும் குளிர் காற்றுல் ஈர்க்கப்பட்டு, இவ்வுலகத்தில் உயிர்கள் தோன்றிய காலந்தொட்டே பேரின்பம் என்னும் புரைபடா நீரைப்பொழிந்து கொண்டே இருக்கும் செழுங்கடல் என்பது விளங்கவே அது பழங்கடல் எனப்படுவதாயிற்று. பேரின்பப் பழங்கடல் என்பது எது, அது எத்தகையது என்பதை விளக்கிய மாணிக்கவாசகர் அங்கு செல்லும் சீரிய நெறியை அருட்பத்தில் அழகுற விளக்கி யுள்ளார். அஃதாவது –

"இருந்தவா றெண்ணி ஏசறு நினைந்திட்
டென்னுடை எம்பிரான் என்றென்(று)
அருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்
அலைகடல் அதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி இதுகாண்
போதராய் என்றரு ளாயே."

'கயிலை மாமலை மேவிய கடலே!' 'ஆழி·யப்பா! உடையாய்! அடியேன் உன் அடைக்கலமே' என மெய்யன்பால் உளங்கனிய உவந்தழைத்தால், பேரின்பம் பொங்கி ஓங்கும் கங்குகரை காணாத கடலினுள்ளே நின்று பழங்கடல் 'புகுநெறி இதுகாண்' 'வருவாய்' என அழைப்பார் என அருளியுள்ளார் அம்பலவாணர் கழலிணையை மருவாகக் கொண்ட' மாணிக்கவாசகர்.

இதுவரை பேரின்பப் பழங்கடல் பற்றியும், அங்கு சென்று சேரும் சீரிய நெறியையும் கூறியவர் அடுத்து பேரின்பப் பழங் கடலைச் சேருவதால் பெறும் பயன் என்ன என்பதனைப் பிரார்த் தனைப் பத்தில்,

"காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா
உன்றன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ பரமா
னந்தப் பழங்கடல்சேர்ந்(து)
ஆவி யாக்கை யானெனதென் றியாதும்
இன்றி அறுதலே"

இங்ஙனம் திருவண்டப்பகுதியில் பேரின்பப் பழங்கடலை விளக்கி, பின் அருட்பத்தில் புகுநெறியைக் கூறி, முடிவாகப் பிரார்த்தனைப் பத்தில் பேரின்பப் பழங்கடல் சேர்ந்து ஆவி, யாக்கை, யான், எனது என்று எதுவும் இன்றி ஒன்றிப் போகும் பேரின்பப் பழங்கடலின் பயன் கூறினார்.

ஆதி சீர் பரவும் வாதவூர் அண்ணலின் வாய்மை மொழியை வாழ்வு நெறியாய் வகுத்து, பிறவிப் பெருங்கடல் நீந்திப் பேரின்பப் பழங்கடல் சேர்ந்து, சிறப்புறுவோமாக.

---

# நாடக நடையில் திருவெம்பாவை

திரு. இர. குழந்தைவேலு, அவர்கள் எம். ஏ.,
பாப்பநாயக்கன்பாளையம்.

1

திருவெம்பாவை இயற்றமிழ் வளம் கனிந்தது; இசைத் தமிழாய் இனிமை கொழிப்பது. இதன் அமைப்பு முறையினைக் கூர்ந்து நோக்குவார்க்கு, மாணிக்கவாசகனுர் நாடகப் பண்பு நலன் அமைய அழகுற வடித்தருளியுள்ள சிறப்பு நிலை இனிதின் விளங்கும். இவ்விலக்கியப் பொலிவு – நாடக நயச் செறிவு– மாணிக்கவாசகனுர் தம் ஈடுபாட்டைக் கற்போர் மனத்திலும் வளர்ந்தோங்கச் செய்வது. எனவே, திருவெம்பாவையின் உயிர் நிலை கற்ற பின் நெஞ்சத்தைவிட்டு அகலாது நெடிது நிற்றல் வேண்டும் என்ற நோக்கோடு மாணிக்கவாசகனுர் நாடகத் தமிழ் தழுவலாயினுர் எனல் தகும்.

2

இந்நாளில் காட்சி, காட்சி நிகழுங்களம், நிகழுங் காலம், காட்சியில் பங்கு பெறும் மக்கள் (Character), அவர்தம் கூற்று, குறிக்கோள், உடை, கூற்று எழுஞ்சூழல், சூழலுக்கும் இயல்புக்கும் ஏற்பப் பேசும் முறை, உரையாடலை ஏற்போர் நிலை என்றினையவற்றைத் தெளிய விளக்கும் குறிப்புக்களெல்லாம் நாடக இலக்கியத்து நற் கூறுகளாகக் (Dramatic Elements) கொள்ளப் பெறும். அத்துணையும் அமைக்க இயல்வ தன்றெனினும், தலைமைக் கூறுகள் தோன்றச் செய்தல் வேண்டும்; உணர்ச்சி முற்பட்டுத் தோன்ற வேண்டும்.

மேற்கண்டாங்கு இப் பல்வகை நலமெல்லாம்-அத்துணைக் கூறுகளும்-திருவெம்பாவைக்கு இல்லை என்பது தெளிவு. எனவே திருவெம்பாவையில் அக் குறிப்பு ஒன்றேனும் காணப்படவில்லை எனக் கூறல் பொருந்தாது. கருத்து வெளியீட்டிற்கு ஏற்பத்

தெளிவுறுத்தும் அமைப்பால் அடிப்படை நாடகத்திறத்தைக் காட்டுவது திருவெம்பாவை யாகும். இதனை, நாம் நன்கு உளங் கொளல் வேண்டும்.

நாடகமென்பது நாடக மாந்தரது பேச்சாகத் திரண்டு வளர்ந்து நிறைந்திலங்குவது. இது, நாடகத்தின் உயிர்ப்பண்பு; பொது அடிப்படை. ஆதலான், இப்போக்கை நினைவிற் கொண்டு மாணிக்கவாசகனார் கையாளும் நாடக நடை காட்டும் வழியில் திருவெம்பாவையை நோக்கலாம்.

3

இத்திருவெம்பாவையின் கருத்துக்களை முதலிற் திருவாத வூரர் நிரல் பெறத் தெரிவித்த பாங்கில் சுருங்கத் தொகுத்துக் காணலாம்.

விடியலுக்கு முன்னர் மணமாகாத இளமகளிர் எழுந்தனர்; தோழியரைத் துயிலெழுப்பினர்.

இங்குத் தெருவில் நிகழ்ந்தது முதற்காட்சியாய் அமைவ .

அச் செல்வியர் நீர்த்துறைக்கு நடக்குங்கால் ஒருங்கு குழுமினர்; இறைவன் பெருமையை மதித்து வாயும் மனமும் இனிக்க இனிக்கப் பேசி உவப்புற்றனர்; தாம் கருதிய காதலஞ் செல்வரைத் தந்தருள வழிபடு தெய்வத்தை வேண்டி நிற்கலாயினர்; கழிபெருங் காதலால் கசிந்து இறைவன் புகழையே குழைந்து இனிக்க அடுக்கிச் சொல்லிக் காட்டினர்.

இங்ஙனம் இரண்டாம் காட்சியாய் நடைவழியில் நிகழ்ந்த காட்சியிது.

கன்னியர் நீராடலில் ஈடுபட்டனர்; இறைவன் தம்மைப் புறங்காக்க வேண்டினர்; பொய்கையிலும் பெருஞ்சுனையிலும் கலந்து நீராடினர்; மாமழை போற்றிப் பொழிய வேண்டினர்; தம் கற்பறஞ்சிறக்க நவின்று இறைவன் காட்டும் நெறி நிற்கப் பரவி நீராடலாயினர்.

இது மூன்றும் காட்சியாய்க் கரையிலும் பொய்கையிலும் நிகழ்ந்தது.

இத்துணையே இங்கு நிகழ்ந்த செய்திக் கோவை. இவ் வடிப்படை நிலைகள் திருவெம்பாவையை ஓருறுப்பு நாடகமாகக் (One-Act Play) காணத்தூண்டும் குறிப்பை நல்குவன.

4

முதலெட்டுப்பாக்கள் வேறு வேறிடங்களில் நிகழ்ந்த ஒரு திறக் காட்சிகளை, ஒரே களத்தில் திரட்டிக்காட்டும் தனிச்சிறப் புடையவை என்பது நோக்கத்தகும். இக்கருத்தைக் கீழ்வரும் பகுதிகளில், இளமகளிர் பலவிடங்களில் தோழியரைத் துயி லெழுப்புதல் தெளிவாக்கும்.

தொடக்கத்தே கன்னிப்பெண்கள் ஒருவரையொருவர் எழுப்பி நீராடற்குக் கூடி அழைக்கின்றனர். திருவெம்பாவை நாடக நடைத் தழுவலால் இயன்று வளஞ்செறிந்தது என்பதனை, இளமகளிர் கூற்றுக அமைந்த இச்செயல்திறம் தெளிவிக்க வல்லது. இச் செல்வியர் பேச்சுக்களே திருவெம்பாவை நாடக நிலையின் உயிர்ப்பண்பை உரைக்க முன்னிற்கின்றன.

அவர்களிடையே நிகழ்ந்த உரையாடல்களை உணர்ந்து உவப்புறலாம்.

"பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போதிப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய்" (திருவெம்பாவை,2)

இது, "நேரிழையாய், நாம் நாளும் பேசுங்கால் 'என் கூர்த்த காதல்-பேரன்பு-ஒளிப்பிழம்புருவரான இறைவர்க்கே' என அகங் குழைந்து குறைந்து உருகி உரைப்பாய், இப்போது அத்தீராப் பற்று, மலர்கள் திரண்டு மலிந்து நிறைந்த படுக்கையில் படிந்ததோ?" என்று உறங்கும் மகள்முன் தோழியர் நகை யாடுங்கூற்று.

"நேரிழையீர்
சீசி இவையுஞ் சிலவோ விளையாடி
ஏசு மிடமீதோ?" (திருவெம்பாவை, 2)

என்பது உறங்கும் மகள் தன் தோழியர்க்கு, "நேரிழையீர்! சீசி! நும் மொழியிலும் எள்ளி நகைக்குஞ் சொற்கள் உளவோ?

இஃதென்ன! நகை பூப்ப விளையாடுங் காலமோ?" என இவ்வாறு நடைமுறைப்பேச்சு நடையில் வெகுண்டுரைப்பது போன்றது.

"முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்"(திருவெம்பாவை,3)

"முத்து அன்ன வெண்பற்களையுடையாளே! முன்னர் எம் அனைவர்க்கும் எதிர் எழுந்து 'என் தந்தையினும் நல்ல நெஞ்சத்தின் உணர்வினன்; பேரின்ப வடிவினன்; அமுதம் போன்ற இனியன்' என்று வாயூறி அடுக்கிக் காதலாகிக் கசிந்து அருள் சுரக்க நவிலுந்திறத்தாளே! நின்நறும்பூப் படுக்கையறை வாயிற் கதவினைத் திறப்பாயாக!" எனத் தோழியர் உறங்கும் நல்லாளுக்குத் துயிலுணர்த்தி வேண்டினர்.

"பத்துடையீர் ஈசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ"
(திருவெம்பாவை, 3)

"அன்பு நிறைந்தீர்! நீங்கள் ஆண்டவன்பால் காதலிற் சிறந்தவர்கள். என்னிடத்தும் தோழமை பூண்டவர்கள். நான் தொண்டு செய்யும் வழியில் புதிதாக அடிமைப்பட்டவள். எனது புன்மையினை அன்பினல் தீர்க்கவல்லவர்கள் நீங்களே. அங்ஙனம் அதனைத் தீர்த்து என்னை ஆட்கொண்டருளல் நேர்ந்தால் பொல்லாதது என்ன விளைந்திடுமோ? தீது நேராது" என்று உறங்கிய மடமயிலாள் முறையிட்டாள்.

"எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கு" (திருவெம்பாவை, 3)

அத்துணையும் செவியுற்ற அவள் தோழியர், "நின் முதிர்ந்த அரிய இத்தகைய அன்பின் ஈடுபாட்டை அறியோமோ? அத்திறங் குறித்துக் கூறலும் வேண்டுமோ? ஏமாற்றம் உற்ருயோ? நம் கருத்திற்கு எளிய சிவபெருமானுரை ஒளி படைத்த தூய நெஞ்சினர் பாடுதல் இயற்கையே! இவ் வியல்பு அறியோமோ? நின்னைத் துயிலெழுப்ப விழைந்து இங்கு விரைந்த அனைவர்க்கும் இத்துணையும் வேண்டுவதே! நின் கருத்து நன்று! மிக

நன்று!" என்று உரிமை கலந்த அன்பினால், வெகுளி கொண்டு நெஞ்சம் வெதும்பி அவள் மீது குற்றங்காணுதல் போன்று பொங்கிய நகையை உள்ளடக்கிக் கூறினர்.

மேற்கண்ட உரையாடல் வழித் திருவெம்பாவையது நாடகப் பாங்கின் தலைமைக் கூறு அறியப்படும்.

இங்கு நாடகக்கண்கொண்டு காணும்போது சில இலக்கிய நலங்கள் வெளியாகின்றன. இளமகளிர் வைகறையில் நீராடற்குத் தோழியர் தம் மனைநோக்கினர்; கடைவாயில் அருகணைந்தனர்; தோழியரைத் துயிலெழச் செய்தனர்; அனைவரும் கூடி நீர்த்துறையைக் கிட்டினர்; நீரில் இறங்கி உள்ளங் குளிர்ப்ப ஆடினர். இக்குறிப்புகள் வாயிலாக, அம்மகளிர் வைகறையில் துயில்விடுத்தமையால் மனஎழுச்சியேடு விளங்கிய நன்னிலையையும், இளங்காலையில் தண்ணீரில் நீராடி உடலை ஓம்பிய அழகையும், இளமையின் எழில் வளத்தைப் பெருக்கிய செவ்வியையும், இவ்வண்ணம் இளமையில் குறித்த வேளையில் துயிலெழுதல், குளித்தல் முதலிய ஒழுங்கு முறைகள் வளர்ந்து அவர்பால் பணி செய்து ஏற்றமுற்று வாழத் துணை நின்ற திறத்தையும் தெள்ளத் தெளிய மாணிக்கவாசகனார் காட்டலாயினர்.

## 5

இனி நிகழ்ச்சிக்குரிய காலம் அறியத்தகுவது. பொழுது புலர்ந்தது என்பது,

"இன்னும் புலர்ந்தின்றோ." (திருவெம்பாவை. 4)

என்பதாலும், கோழி கூவிக் காட்டப் பிற புள்ளினம் பறவைத் தொகுதி - ஒலி எழுப்பின என்பது,

"கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்" (திருவெம்பாவை, 8)

என்பதாலும், 'உலகு விளங்கக் கதிரொளி எங்கும் பரவிற்று; இருள் தேய்ந்தது; வானத்துப் பூத்துக் குளிர்ந்து ஒளி பொழிந்த மீன்கள் ஒளி குன்றின; விடியற்காலம் வந்தது' என்பது,

"கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகல"
(திருவெம்பாவை, 18)

என்பதாலும் அறியும் செய்தியுள், நாடகப் பண்பினைப் போற்ற வல்ல நாடக நிகழ்ச்சியின் விடியற்காலம் - நிகழ்ச்சிக்குரிய காலம் - அமைந்து கிடக்கின்றது.

6

சுற்றுச் சூழலாலும் நாடக நுட்பவோட்டத்தைக் காட்டும் திறத்தது திருவெம்பாவை. இது, காட்சியை வரிவடிவில் காட்டியிருப்பது எனலாம்.

"மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே" (திருவெம்பாவை.1)

"இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்ப" (திருவெம்பாவை 7)

"கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்" (திருவெம்பாவை.8)

இங்கு அடுக்கிக்காட்டிய தொடர்களால், கழல் பொலிந்த இறைவன் திருவடிகளை வணங்கி வாழ்த்திப்பாடும் ஓசை தெரு வெல்லாம் தழைத்துப் பெருகிற்று என்றும், வெண்சங்கம்-பெரும்புகழ்ச் சிவபெருமானுர்க்குரிய இளங்காலை இன்னிசைக் கருவி-முழங்கலாயிற்று என்றும், கோழி கூவப் பறவை ஒலி கூட்டலாயிற்று என்றும் அறிகின்ருேம்.

"மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய்" (திருவெம்பாவை, 20)

எனப் பாவின் ஈற்றின் மார்கழித் திங்களைக் குறித்தலின் வழி முன் பனிக்காலத்தின் தண்மையைக்-குளிர்ச்சியைக்-குறிப்பில் திருவெம்பாவை காட்டுகிறது.

இங்குத் தொகுத்தவற்ருல், சுற்றுநிலைகளை நாடகப் பண்பு நோக்கி மாணிக்கவாசகனுர் எழுதி உள்ளங் கவர்ந்தனர் என்ற அவர்தம் புலமை விளங்குவதாயிற்று.

8

அம் மகளிர்தம் அன்புக்குரிய இறைவன் திருவடியில் நெஞ்சைப் பதியவைத்து, அத் தலைமைச் செல்வன்பால் முருகி எழுந்த வழிபாட்டு உணர்வோடு, தாம் மனத்தில் குறித்த

ஆண்டகையர் பெற்றியினை வெளிப்படுத்தி, அந்நல்லாரைத் தந்தருள வேண்டும் வகையாலும் (திருவெம்பாவை,9), நீங்காத பல்வளச் செல்வம் நிறைய மழை வேண்டும் கருத்தாலும் (திருவெம்பாவை,16), புலன்கள் ஒன்ற இறைவனை நினைந்து உருகிப்போற்றி, நாணினும் சிறந்த கற்புடைக் கொள்கை குலையாது ஓங்கி நிலைக்க நெறிவேண்டும் நலத்தாலும் (திருவெம்பாவை,19) நாடக மாந்தர் பலரையும் தொகச்செய்தல் போன்று காட்டியது நாடக அமைப்பு எண்ணிக்கையாண்டது எனல்தகும்.

9

இங்குக் கண்ட திருவெம்பாவைச் செய்திகளால், இசைப் பாக்களின் உணர்ச்சிக் குரலிலேயே நாடகத் தமிழ்க்குறிப்பு இயங்கும் புதுமையை மாணிக்க வாசகனுர் ஒளிர வைத்துள்ள னர் என்பது விளங்கும்.

---

இராகம்: வாசஸ்பதி தாளம்: ஆதி

பல்லவி

முருகனை நினைமனமே தினமே
திருமால் மருகோன் தீனசரண்யனும் (முருகனை)

அனுபல்லவி

தருணமிதுவே தயாளனைத் துதிசெய்திட
சிறியோன் என்தனின் பிழைகளைப் பொறுத்திட (முருகனை)

சரணம்

அண்டசராசரம் எதிலும் அணுவாய்
அமர்ந்திடும் ஈசன் புகழைப் பாடிடு
விண்ணும் மண்ணும் நிறைந்து துலங்கிடும் ஈசனுய்
விளங்கிடும் வேலன் முத்தையனைத் தேடிடு (முருகனை)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி-3.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 15. இதழ் 9-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

The mystic can never be a satisfied ceremonialist. These Saivite devotees commonly praise the god of a particular shrine in language which might suggest that Siva is only to be found there. And everyone who knows India remembers the ceaseless streams of pilgrims journeying to the Ganges or the Cauvery (Tamil Kaviri), to Rameswaram or Cape Comorin or a hundred other holy places. But with a fine inconsistency these ancient singers sometimes point men away from externalities to a worship inward and spiritual; witness the following hymn. As to the terms used in v. 50, Vedas are the religious works of the highest authority, Sastras are philosophical and practical works based on them, while Vedangas are sciences subordinate to the Vedas, and there are six of them.

49. கங்கையாடிலென்காவிரியாடிலென்
கொங்குதண்குமரித்துறையாடிலெ
னோங்குமாகடலோ தநீராடிலெ
னெங்குமீசனெனாதவர்க்கில்லையே.

49. Why bathe in Ganga's stream, or Kaviri?
Why go to Comorin in Kongu's land?
Why seek the waters of the sounding sea?
Release is theirs, and theirs alone, who call
In every place upon the Lord of all.

---

(தொடரும்)

# திருவருட்பயன் — தெளிவுரை

பண்டித வித்துவான், சைவப் புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்,

---

(மலர் 15. இதழ் 9-ன் தொடர்ச்சி)

## 9. ஐந்தெழுத்தருள் நிலை

அஃதாவது திருவைந்தெழுத்தை ஓதி அத்திருவருளிலே அழுந்தி நிற்கும் நிலையென்று பொருள்படும். மேல் அருள் வயப் பட்டு அதன் வழித்தாகப் பேரின்பம் நுகருமாற்றை விவரித்தார். இனி, அப்பேரின்பம் நுகருவார்க்கும், "பெருங்காயத்தை முழுதும் எடுக்கப்பட்ட பின்பும் அது இருந்த பாத்திரத்தில் அவ் வாசனை இருத்தல் போல," ஆணவம் அகலப் பெற்றும் ஒரோ வழி அதன் வாசனையால் கருவி கரணங்கள் உலகியல் பொருள் களை நினைபுமாதலின் அது நினையாமைப் பொருட்டும், அத்திரு வருளில் அழுந்தி நிற்றற் பொருட்டும், திருவைந்தெழுத்தை ஓதுக எனவும், அதனை ஓதும் முறை இதுவெனவும், அதன் பொருள் இதுவெனவும், இவ்வதிகாரத்து அருளிச் செய்கின்றார் ஆதலின் மேலையதனோடு இயைபுடைத்தாயிற்று.

இதற்கு இவ்வாறன்றி, ஐந்தெழுத்தருள் நிலையாவது ஐவகைப் பட்ட திருவெழுத்தாகிய அருளினது முறைமை என் றும், இதனையுமோர் திருவருளாகக் கூறினர் வீட்டு நெறி காட்டுதலால் என்றும், அவ்வாறே சமாதியினை அடைதல் கூடா தார்க்கு இதனை விதிப்படி ஓதலே அந்நிலை கூடுமாதலின் மேலை யதிகாரத்தினோடு இயைபுடைத்தாயிற்று என்றும் கூறுவர் நிரம்ப அழகிய தேசிகர்.

81. அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள்நூல் தெரியப் புகின்.

(தெ - ரை) இறைவனுல் அருளிச் செய்யப்பட்ட ஆகம நூல்களும், வேதங்களும், மற்றும் உள்ள ஞான சாத்திரங்களும் ஆராய்ந்து பார்க்குமிடத்து திருவைந்தெழுத்தின் உண்மை நன்கு விளங்குதல் காண்க.

வேதாகமங்கள், சாத்திர தோத்திர நூல்கள் அனைத்தும் ஐந்தெழுத்தின் உண்மையை விளக்க எழுந்தனவேயாம் என்பது கருத்து.

" அஞ்செழுத்தே ஆகமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறுறுக் கப்பாலாய
மோனந்த மாம்முத்தி யும்".

" வேத நான்கினும் மெய்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே."

என்றல் தொடக்கத்துத் திருவாக்குகளும், இவ்வுண்மையை நன்கு விளக்குதல் காண்க.

'தெரியப்புகும்' எனப்பாடம் ஓதி இந்நூல்கள் எல்லாம் திருவைந்தெழுத்தின் உண்மையையே தெரியப் புலப்படுத்துவன வாம் எனப்பொருள் உரைப்பாரும் *உள்ர்.

82. இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள்.

(தெ - ரை) ஓங்காரத்துள் சிவம், சத்தி, மலம், அழகு மிக்க மறைப்பாற்றல், உயிர் ஆகிய இவை பொருந்தி நிற்கும்.

'நவசிவாய' என்னும் ஐந்தெழுத்தினுள் சிகரம் இறைவனையும், வகரம் சத்தியையும், யகரம் உயிரையும், நகரம் திரோதன சக்தி (மறைப்பாற்றல்) யையும், மகரம் மலத்தையும் குறிக்கும்.

* சிவபாத சுந்தரம்: தே. ஆ. சீனிவாசன்.

ஓங்காரம் என்பதே பிரணவமாகும். அது அகர, உகர, யகரம் ஆகிய மூன்றும் கூடியதென்பர். திருவைந்தெழுத்தில் (சிவாயநம என்பதில்) நகரம் வகாரத்துள்ளும், மகரம் யகரத் துள்ளும் அடங்க 'சிவய' என நிற்கும். இம் மூன்றனுள் சிவத்தைக்குறிக்கும் சிகரமும், அருளைக் குறிக்கும் வகரமும் அகரத்துள் அடங்கும். உயிரைக் குறிக்கும் யகரம் உகரத்துள் அடங்கும். மலத்தைக் குறிக்கும் எழுத்தாய் மகரம் நிற்கும். இங்ஙனம் ஓங்காரத்துள் (அ + உ + ம்) திருவைந்தெழுத்து அடங்கி நிற்றல் காண்க. மறைப்பாற்றல் (திரோதன சத்தி) உயிர்க்கு மலபரிபாகம் ஏற்படும் பொழுது அதனை இறைவனது திருவடியில் செலுத்தி அதற்கு முற்றுணர்வைக் கொடுக்க வல்லதாகும். ஆதலின் இதனை 'எழில் மாயை' என்றார்.

83. ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம்
ஞானநடம் தான்நடுவே நாடு.

(தெ–ரை) சிவாய நம எனும் திருவைந்தெழுத்தில் யகரமே (உயிர்) இடையில் நிற்பதாகும். அதற்கு ஒரு மருங்கில் சிகர மும் வகரமும் உள. பிறிதொரு மருங்கில் நகரமும், மகரமும் உள. உயிர் மறைப்பாற்றலால் மறைக்கப்பட்டு மலத்துடன் இயைந்து நிற்கும் நிலையை ஊன நடனம் என்றும், திருவரு ளால் சிவத்துடன் இயைந்து நிற்கும் நிலையை ஞான நடனம் என்றும் கூறுவர்.

பிறப்பில் உழன்று நிற்கும் நிலை ஊன நடனம் ஆகும். உயிர் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும். அவை ஊன நடனத்தி னின்றும் நீங்கி ஞான நடனத்தில் வாழ வேண்டும் என்பதே இறைவனது பெருங்கருணையாகும்.

'ஒருபாலாக' எனப்பாடங் கொள்வர், தே. ஆ. சீனிவாசன் அவர்கள்.

84. விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரப் பெறும்.

(தெ - ரை) மகரமும், நகரமும், யகரமாகிய உயிரைப் பொருந்த அது உலகியற் பொருள்களைப் பற்றிக் கொண்டு பிரிய இயலாதவாறு தடைசெய்கின்றன. உயிர் அம்மலப்பிணி நீங்கிச் சிகரமாகிய சிவத்தைப்பெறும் என்பதாம்.

ம, ந யவ்வை மேவி விரிய (அவற்றினின்றும்) மீளவிடா; தம் பெரியவினை தீரச்'சி'பெறும் எனக்கூட்டுக. சித்தம் என்பது ஒரு சொல்லன்று; சி + தம் = சித்தம் என்ருயிற்று. 'தீரிற்பெறும்' எனப் பாடங்கொள்வர். நிரம்ப அழகிய தேசிகரும், சிந்தனை யுரைகாரரும்.

85. மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாக மீள விடின்.

(தெ-ரை) அந்நகார மகாரங்கள் இரண்டினையும் கீழாக்கிச் சிகரவகரங்களை மேலாக்கிச் (சிவாய நம என) ஓதினன்றி, மயக் கத்தைப் பொருந்திய திரோதானமும் மலமுமாகிய நகாரம் மகாரம் ஆகிய இரண்டினையும் முதற்கண்ணே வைத்து (நம சிவாய)என ஓதின் அம்மயக்க மும்மலமும் நீங்குமோ? நீங்காது.

இதனுல் வீடு எய்துவார்க்குச் சிகரத்தை முன்னே வைத்து ஓதும் திருவைந்தெழுத்தே உரியது என்பது பெறப்பட்டது.

'மேலாசு மீளாவிடின்'எனப்பாடங்[1]·கொள்வாரும்; 'மேலாசி மீளாவிடின்' எனப்பாடங்[2]·கொள்வாரும் உளர்.

(தொடரும்)

1. ச. சிவபாத சுந்தரம். 2. தருமையாதீனப் பதிப்பு.

# அணையா விளக்கு

திருமதி. அனந்தலட்சுமி சுப்பிரமணியம் அவர்கள் B. SC.
முதுகலை வகுப்பு (தமிழ்) இரண்டாம் ஆண்டு
இராணி மேரிக் கல்லூரி, சென்னை.



ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் தீர உணர்ந்து, இனிது துய்த்து வாழ்ந்து வந்தனர் நம் தமிழர். கலையை எங்கெல்லாம் கண்டார்களோ - கலையின் பயனை எங்கெல்லாம் எப்படி யெல்லாம் துய்த்தார்களோ அப்பொழுதெல்லாம் வாழ்வின் பெரும் பயனைத் துய்த்து விட்டதாக எண்ணி இறும்பூதடைவார்கள். உலகமெல்லாம் போற்றும் தஞ்சைக் கோயிலைக் கட்டிச் சோழன் பெருமையடைந்தான். பாண்டியன் இன்றும் மக்கள் மகிழ்ந்து பாராட்டும் பல கோயிலைக் கட்டி வைத்தான். ஆனல் சேரனே என்றும் மறையாத சிலப்பதிகாரம் என்னும் மாளாக் கோபுரத்தைக் கட்டி முடித்தான் கற்ருேர் நெஞ்சில்! சோழன் கோயில் ஒரு காலத்தில் இடிந்து விழுந்து மண்ணோடு மண்ணுகி விடலாம்; பாண்டியன் கோயில் கவனிப்பாரற்றுச் சிதைந்து போகலாம். ஆனல் சேரன் கோயிலோ என்றும் மறையாது-மனிதன் நெஞ்சில் மாரு இடம் பெற்று உலகம் என்று ஒன்று நிலைத்து நிற்கு மட்டும் அழியாத கோபுரம். கற்ருேர் போற்றும் இன்ப மாளிகை. அங்கு நின்று காட்சி தருபவை இரு காதலர் உருவங்கள். அவர் காதலுக்கு ஒளி யூட்டி நிற்கும் மாதவி என்னும் பாவை விளக்கு.

மாதவி என்னும் கொடியை மனிதர்க்குப் பல கோணங்களில் எடுத்துக் காட்டுகிருர் சேரலர்கோனின் தம்பி. அரங்கேற்று காதையில் கலையரசியாய் - கோவலனுடன் சேர்ந்தவுடன் அன்புக் காதலியாய்க் காட்சியளிக்கிருள். அந்தி மாலைச் சிறப்புச் செய்காதையில் கணவனுடன் இன்பம் துய்க்கும் தலைவி

யாய்க் காண்கிறோம். கானல் வரி பாடிக் கோவலனை விட்டுப் பிரிந்த மாதவியோபசலை நோய்மிக்குத்தலைவனைப் பிரிந்த தலைவி போல் துன்பப்படுகிருள். பிரிந்த பின்னும் கணவனைத் துறந்த தலைவிபோல் நடுங்கு துயருற்று இருந்தாள். ஆனால் இவள் தன் குல ஒழுக்கத்தைப் பேணினளில்லள். அந்த வாழ்க்கையை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. பின் தலைவன் கொலைப்பட்டான் என்பது உணர்ந்ததும் உயிர்விட வழியின்றி வெய்துயிர்த்து நின்ருள். இந்த வாழ்க்கையை வெறுத்து முடிவில் துறவறம் பூண்டாள்; தன்மகள் மணிமேகலையையும் பூணச் செய்தாள். இதுதான் அந்தப் பாவையின் வரலாறு.

மாதவியை முதலில் காண்கிறோம் ஆடல் மகளாக. அவளுக்கு ஆடலும் பாடலும் அழகும் நிரம்பியிருக்கின்றன. இவை ஒரு கணிகைக்குரியவை. இவையே, இவளுடைய வாழ்க்கையை நடத்திச் செல்ல வழி வகுக்கின்றன. ஆடல் அவளைக் கோவலன் என்னும் இருநிதிக் கிழவன் பால் பிணைத்து விடுகிறது. இவள் அழகு அவனை வேறிடம் செல்லாதவனுய் மாற்றி, அவளைப் பிரிதல் அறியாப் பெருவிருப்பினனுகச் செய்து விடுகிறது. ஆனால் அவள் பாடலோ - அவள் கலையிலும் மேலாகப் போற்றிய காதலனை அவளிடம் இருந்து என்றுமே இணையாதபடி பிரித்து விடுகிறது.

மாதவி ஏழாண்டுகள் நன் முறையில் ஆடல் பாடல் கற்ருள். சோழன் மனமகிழ, உடனிருந்தோர் மெய்ம் மறக்க, தானறிந்த முறையில்-மிகச் சிறந்த முறையில் நடம் பயின்ருள். அதன் பலனுக, தலைக்கோலும் மாலையும் பெற்ருள் அரசனிடமிருந்து. அந்த மாலைக்கு ஆயிரத்து எட்டு கழஞ்சு என விலை குறித்து, "மாலை வாங்குநர் சாலும் நம் கொடிக்கு" எனக் கொண்டு விற்றனர். கோவலன் பொன் கொடுத்தான். இருமாலை பெற்ருன். பெண் மாலை. பொன்மாலை இரண்டும் கைவசமாயின.

கோவலன் அதற்கு முன் சில ஆண்டுகள்தான் அவன் துணைவி கண்ணகியுடன் வாழ்ந்திருக்கிருன். ஆனால்மிக இன்பம் தரத்தக்க முறையில் வாழ்ந்திருக்கின்ருன். இதனை இளங்கோ அடிகளும்,

“தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து செல்வுழிநாள்
..................................
யாண்டு சில கழிந்தன ......................” (மனையறம் 82-90)

அத்தகைய கோவலன் மாதவியுடன் பல ஆண்டுகள் கழித்தி ருக்கிறான். மணிமேகலை பிறந்து வளரும் வரை மாதவியுட னேயே இருந்திருக்கிறான் என்றால் இது கண்ணகியின் குற்ற மன்று; மாதவியின் சிறப்பேயாகும். கண்ணகிக்கு அழகு மிகுந்திருந்தது. ஆனால் அவனைக் கவர்ந்து மகிழ்விக்கும் ஆட லும் பாடலும் மாதவிபோல் அவளிடம் இல்லை; கோவலன் சிறந்த கலைஞன்; கலைப்பித்தன். கலை என்பது நெகிழ்வுடையது. கூரிய அறம் போன்றது. அதற்கு மதிப்பு அளித்துப் போற் றவே வேண்டுமன்றி அதற்கு அதிக இடம் கொடுத்தல் கூடாது. அவ்வாறு கலையின் பால் ஈடுபாடு கொண்ட கோவலன் மனம் மாதவிபால் சென்றது. அதனால் கண்ணகி என்னும் குலப்பிறப்பாட்டியைச் சற்றே மறந்தான்.

கண்ணகி “கணவன் எவ்வழி அவ்வழி தன்வழி” என்ற கொள்கையைக் கொண்டிருந்தாள். பெருத்த அன்பின் காரண மாய் அவனுக்கு அடிமையானாள். அதனால் அவன் தனக்கு எத்த கைய கொடுமைசெய்யினும் பெரும் பொருட்டாய் எண்ண வில்லை. அவனுக்குத் துன்பம் வராது காத்தலே தனக்கின்பம் எனக் கொண்டாள். அவன் மனதில் குறைபாடு ஏற்படுத்தல் கூடாது என்பதற்காக அவன் கூறியபடியெல்லாம் நடந்தாள். அதனால் அவள் இல்லற வாழ்க்கையில் இன்பம் தரும் “ஊடல்” என்பதே இல்லாமல் போய் விட்டது. அதனால் ஊடல் பின் தோன்றும் கூடலும் இல்லை. இல்லறம் என்னும் அரிய உணவிற்கு உப்பு போன்றது ஊடல். ஊடல் பின் தோன்றும் கூடலோ மிக்க இன்பம் அளிப்பது. ஆக உப்பில்லாப் பண்டத்தைக் குப்பையில் தானே எறிய வேண்டியுள்ளது. இந்தச் சுவையைக் கண்ணகி பால் காணாத கோவலன் மாதவிபால் பெருமளவு கண்டான். இதுதான் அவனை விடுதல் அறியா விருப்பினனாக மாற்றியது.

"நிலவுப் பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்
கலவியும் புலவியுங் காதலற் களித்தாங்
கார்வ நெஞ்சமொடு கோவலற் கெதிரில்"

பல நகை பூண்டு கோல மிக மாதவி அமர்ந்திருந்தாள் என்பார் இளங்கோவடிகள். இது மட்டுமல்லாது இந்திரவிழா முடியுங் காலத்தில் மனம் வாடி முகம் வாடியிருக்கும் கோவலனையாற்றும் பொருட்டு மாதவி சென்றமையை, இந்திர விழாவில் குறிப்பர்.

"ஊடற் கோல மோடிருந்தோ னுவப்ப" (இந்திர : 75)

இவ்வாறு மாதவி இருந்தமையால் தான் கண்ணகி பால் கொண்டுள்ள அன்பைச் சிறிதுகாலம் மறந்திருந்தான் கோவலன் அதனால்தானே கோவலனையும் கண்ணகியையும் "காதலர் காதலர்" என்று கூறிச் செல்லும் இளங்கோவின் நா மாதவி கோவலனைக் "காதலர்" எனக் கூற மறுக்கிறது?

கோவலன் மாதவிபால் காதல் கொண்டானே இல்லையோ, மாதவி அவனிடம் ஈடற்ற அன்பு கொண்டிருந்தாள். கோவலன் பொருட்டே வாழத் துணிந்தாள். அவள் வாழ்வில் முதலிடம் பெற்ற கலை கோவலனுக்குத் தன் இடத்தை அளித்து பின் இரண்டாம் இடத்தையே அடைந்தது. அவன் இன்புறும் பொருட்டே ஆடுகிறாள் பாடுகிறாள். தன்னை ஒப்பனை செய்து கொள்கிறாள். கோவலன் மனம் வாடும் போது உள்ளம் துடிக்கிறாள். இதனையே இந்திர விழாவின் போது காணலாம். இந்திர விழாக் கோலத்தில் கோவலன் மட்டும் கவலை தோய்ந்த மனத்தினனாகக் காட்சியளிக்கிறான். குன்றெனக் குவிந்த செல்வத்தைத் தொலைத்தமையாலோ? அல்லது இனிய விழா முடிவு பெற்றமை குறித்தோ வருந்தி அமர்ந்திருக்கிறான். இதனைக் கண்ட மாதவி தான் இல்லாமையால் வருந்துகிறான் என்று எண்ணி அவனுக்கேற்ப ஒப்பனை செய்து வருகிறாள்? என்னே பெண் மனம்!

இத்தனை நாள் அவனை அவளுடன் இணைத்த ஆடலும் பாடலும் இன்று கசந்தன. அவள் பாடிய கானல் வரியும் "மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள்" என அவள் பெருமை யையும் குலப்பெருமையையும் உணர்த்தியது; கோவலன் மாத வியைப் பிரிந்தான். பிரிந்தவன் போக வேறு இடம் இருந்தது. பிரிந்தவனை ஏற்க திருமாபத்தினி கண்ணகி இருக்கிறாள். இனிக் கவலையில்லை. ஆனால் மாதவியின் கதி! அவள் குலப்பெருமை யைப்போற்றி வந்தால் அவளுக்குக் கவலையில்லை. "இன்றொரு வன் நாளை மற்றவன்". வாழக்கூடாத வாழ்க்கையை நடத்திக் கொண்டே போயிருக்கலாம். ஆனால் அவளோ சேற்றில் மலர்ந்த செந்தாமரை. அதன் பலன் பசந்த மேனியளாய் நடைப் பிணம்போல் உயிரும் உடலும் ஒட்டி வாழ்க்கை நடத்துகிறாள். அவள் துயரம் அவனைக் கோவலனை அழைக்கத் தூண்டு கின்றது. அத்துன்பத்திற்கு உறுதுணையாய் நின்று இளவேனி லும், மாலை மதியமும் தூண்டுகின்றன. இதன் பலனாக, செண் பகம் மாதவி முதலியவை மிக நெருங்கித் தொடுக்கப்பட்ட மாலையின் இடையே தொடுக்கப்பட்ட நல்ல முடத்தாழை மடலில் பித்திகையின் கொழுவிய முகையினைச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்துக் கடிதம் தீட்டி இருக்கிறாள். காதல் வெள்ளம் தாழை மடலில் பெருக்கெடுத்துள்ளமையைக் காட்டுகிறது அந்தக் கடிதம். அதனில்,

"மன்னுயி ரெல்லா மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனி லிளவர சாளன்
அந்திப் போதகத் தரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினும்
தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்
நறும்பூ வாளியி னல்லுயிர் கோடல்
இறும் பூதன்றிஃ தறிந்தீமின். [வேனிற்காதை: 56-631]

என்று குறித்து அனுப்பியிருந்தாள் வசந்தமாலை மூலம். அவள் பதில்கொண்டு வருவாள் என்று எதிர்பார்த்து நின்றாள். ஆனால், அவள் தோழியோ அவன் மறுத்தமைகூறி மீண்டும் அம்மாலையைக் கொண்டுவந்தாள். முதலில் மிக வருந்தினாலும்,

திரும்பவும் எப்படியிருந்தாலும் வருவான் என்று நம்பினுள். அது தன் மீது கொண்டிருந்த அளவிறந்த நம்பிக்கை. முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவதுபோல் இனமறியாத நம்பிக்கை. ஆக, அவள் "மாலே வாராராயினும் மாணிழை காலே காண்குவம்" எனத் தோழிக்கு உரைப்பது போல் தன்னைத் தானே தேற்றிக் கொள்கிருள்.

காலே வந்தது; கோவலன் வரவில்லே. ஆனல் செய்தி வந்தது, கோவலன் மதுரையை நோக்கிப் போய்விட்டதாக யாருடன்? அவன் தன் குலமகளாகிய, அவனுடன் முதலிருந்தே வாழ்க்கையில் இணேக்கப்பட்ட பெண்ணுடன் சென்ருன். மாதவி கேட்டு வருந்தினுள்; அவன் தன்னைப் பிரிந்ததற்காக அல்ல; ஆனல் தான் அவனைத் துரத்தி விட்டதற்காக. இப்பொழுது தான் நிலேமை புரிந்தது. தான் யார்? அவனுடன் சென்ற அந்தப்பெண் யார்? என்றெல்லாம் சிந்தித்துப் பார்த்தாள். "கண்ணகி அவனுடன் வாழ்வதற்கே எனப் பிறந்தவள். என்றேனும் ஒருநாள் அவனுடன் சேரவேண்டிய உரிமை பெற்றவள்: ஆனல் தானே மலர்விட்டுமலர் தேனெடுத்து திரியும் வண்டென வாழ்க்கையை உடைய பெண். சமூகத்தினல் ஒதுக்கப்பட்டவள்" என்றெல்லாம் உய்த்துணர்கிருள். இதன் பலன் காதலனுய் இருந்த கோவலன் இன்று அவர்கள் முன் "பெரியோனுய்" மாறிவிடுகிருன். அவனே அடிகள் என்று அழைக்கிருள். முன்பு போல் தன்னிடம் அழைக்க அல்ல. தான் செய்த தவற்றிற்கு மன்னிப்பு கோரவே தான் இம்முறை எழுதுகிருள். முன்புபோல் தாழையில் பித்திகை கொண்டு செம்பஞ்சுகுழம்பில் தோய்த்து காதல் களிகூர எழுதவில்லே. எல்லாம் உணர்ந்து வாழ்க்கை என்பது என்ன என்று உணர்ந்த அறிவுடை மகளாகவே கடிதம் எழுதுகிருள்.

அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்
வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்
குரவர் பணியன்றியுங் குலப்பிறப் பாட்டியோ
டிரவிடைக் கழிதற் கென்பிழைப் பறியாது
கையறு நெஞ்சங் கடியல் வேண்டும்
பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி [புறஞ்சேரி...87-92]

இதற்கும் முன்னையதிற்கும் என்னே வேற்றுமை? முன்னையதில் இருந்த இளமைத் துடிப்பு இதனில் இல்லை. ஆனால் இதனில் காணும் பணிவும் அன்பும் அதனில் இல்லை. முன்னையதில் காணும் உரிமை உணர்ச்சியும் இதனில் இல்லை.

கோவலன் மாண்டபின் தன் உயிர் விடல் தெரியாது விதிர் விதிர்த்து நிற்கிறாள். இந்த வாழ்வே தேவையில்லை என்று பௌத்த மடத்தில் சேர்ந்து விடுகிறாள். தன் மகளான மணிமேகலையையும் சேர்த்து விடுகிறாள். இது அவள் கற்பின் தன்மையை விளக்கும். அவள் மணிமேகலையைத் தன் மகளாக ஒரு நாளும் கொள்ளவில்லை. என்றும் கற்புக்கரசி கண்ணகியின் மகளாகக் கொண்டு வளர்க்கிறாள். இது அவள் பெருமைக்கும் பெருந் தன்மைக்கும் எடுத்துக்காட்டு.

இத்தகைய சிறந்த மாண்புகள் கொண்ட மாதவியின் பால் பல குற்றம் காண்கின்றனர். அவர்காட்டும் குறையெல்லாம் மணமான ஒருவன் மீது அவன் மனைவியின் மனம் துன்புறக் காதல் கொண்டமைதான். மாதவி கணிகையர் குலத்தில் பிறந் தாள். அது சமூகத்தால் ஒதுக்கப்பட்டது. சமூகம் கணிகைய ரையும் மனிதராக உள்ளத்து உணர்ச்சியுடையவராக நினைக்க வில்லை. ஆகையால் மாதவி எப்படியிருந்தாலும் மணம் புரிந்த ஒருவனையே பெறவேண்டும், அதுவும் அவள் இன்பத்திற்காக மணம் அற்றவனைப் பெற்றாலும், அவன் ஒரு குலமகளையே மணக்கவேண்டும். இதுதான் சமூகத்தின் கட்டுப்பாடு. இந்த நியதிப்படி எப்படி யிருந்தாலும் மாதவி, மணமானவனையே பெற்றிருப்பாள். ஆகையால் மாதவியின் குற்றம் என்பதைவிட, சமூகத்தின் பண்பாடு வளராத் தன்மையே என்பது உணரலாம்.

மற்றொரு குறை. கோவலனுக்கு இன்பம் ஊட்டி வந்த மாதவி, அவனுக்கு உறுதுணையாய் நின்று, "தற்கொண்டான்" பேணவில்லை என்பதுதான். ஊடலும் கூடலும், ஆடலும் பாட லும் கொண்டு இன்பம் அளித்த மாதவி ஏனோ பொருள் தேடலில் அவனை ஊக்குவிக்க மறந்தாள். அவனுடன் சேர்ந்து. களி யாட்டங்கள் புரிந்தாள். ஆனால் பொருள்தேடத் தூண்டவில்லை. அவன் மாதவியிடம் வரும்போது சிறந்த செல்வனாய் இருந்தான்.

அவன் தந்தை, மாசாத்துவான் இருநிதிக்கிழான். தன் செல் வத்தால் அரசனுக்கு அடுத்த இடம் பெற்ருன். அவன் செல்வம் எல்லாம் கோவலன்பால் சேர்ந்தது. ஆனுல் ஆடல் பாடலில் கழித்தமையால் செல்வம் தொலேந்தது. இதனுல் அவனுக்குக் கவலே ஏற்பட்டது. அதனுல்தான் இந்திர விழாவின் போது முகம் வாடி யிருந்தான்போலும். ஆனுல் தன் செல்வம் தொலேத்த மைக்கு மாதவியைக் காரணமாகச் சுட்டிக்காட்டுகின்ருன்."

"சலம்புணர் கொள்கை சலதியோ டாடிக்
குலம்தரு வான்பொருட் குன்றந் தொலேந்த
இலம்பாடு நாணுத் தருமென" [கனுத்திறம் 69-71]

கூறுகிருன். ஏற்கெனவே வந்தவர்க்கெல்லாம் வாரிவாரி வழங்கும் வள்ளலாயிருந்தான். ஆனுல் தேடிக்கொண்டே செல வழித்தால் செல்வம் தொலேயாது. ஆனுல் இவன் காதல் வலேயில் கட்டுண்டு தொழில் மேல் நாட்டமின்றி இருந்தான். அவளும் அவனுடன் ஆடி, பொருள்பற்றி மறந்திருந்தாள். அதன் பலன் அவன் அவளே மறக்கும் நிலே நேர்ந்தது.

ஆக இவ்வாறு குணமும் குறையும் கொண்ட மாதவி அரிய பாத்திரமாகக் காட்சி தருகிருள். கோவலன் கண்ணகி என்ற காதல் தெய்வங்களுக்கு அணேயா விளக்காகப் பாவை விளக்காக மாதவியை ஏற்றியிருக்கிருர் இளங்கோ வடிகள். என்ன பெருமை! என்ன மாண்பு! அந்தப் பாவை கற்ருேர் மனதிலே சிலம்பெனும் கோயிலிலே அணேயா விளக்காய் ஒளிர்ந்து கொண்டிருக்கும் என்பதுறுதி.



சுந்தர மூர்த்தி சுவாமிகளின்

# அற்புதத் திருப்பதிகங்கள்

## Hymns of St. Sundarar

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.



Saint Sekkilar. the author of the Peria Puranam, was confronted with the problem of linking the biographies of the sixty three Nayanmars (Saiva Saints). It was a big job for him, as they had lived in different parts of the country and at different times, having no connection with each other, except for a few like Saint Sambandar, Saint Appar, Saint Siruthondar, Saint Tiruneelakanta Yalppanar etc., St. Sundarar's Tiru thondathogai formed the basis for Sekkilar's Peria Puranam and as such the latter took the life of the former to link those of the rest. St. Sundarar has given in a nut shell the lives and deeds of his predecessors in his immortal work on the basis of which Sekkilar built his edifice. And so he portrayed St. Sundarar as the hero of his epic.

St. Sundarar was born in Tirunavalur, in Tiru muaippadi Nadu (South Arcot District), of Sadaiyanar and Isaignaniyar. First he was named Nambi Aroorar and later on he came to be known as Sundara murti Swamigal. Nambi Aroorar was a very handsome boy and attracted the attention of the chieftain, Nara singa Munaiyaraiyar, of that region, ie., Tirumunai ppadi Nadu. With his parents' permission Nambi

Aroorar was brought up in the royal surrounding and was throughout his life a prince both in thought and deed.

When he came of age, his parents with the consent of the local ruler, ie. Narasinga Munaiyaraiyer, arranged for his marriage. The daughter of one Sadangavi Sivachariyar was selected and the marriage was taking place at Manam Vanda Puttur (near Panruti, South Arcot District). Just then an elderly brahmin entered the marriage pandal and demanded the revocation of the marriage on the plea that the bridegroom was a slave of his and as such the wedding could not go on until and unless they came to an understanding. Everyone was appalled to learn a brahmin claiming another brahmin as his slave. And it was but natural that Nambi Aroorar was both interested in finding out the truth and intrigued at this intrusion.

(To be continued)

# திருத்தினை நகர்

தேவாரமணி, திரு. சட்டையப்பன் அவர்கள்.
திருப்பனந்தாள்.



'இட்டிக் கெட்டாருமில்லை, வாழ்த்தி வாழ்ந்தாருமில்லை' என்பது ஓர் பழமொழி. அதுபோல "வினைவிதைத்தவன் வினையறுப்பான்; தினை விதைத்தவன் தினையறுப்பான்" என்பதுவும் நம் தமிழ் நாட்டுப் பழ மொழிகள். வழக்கச் சொல்லில் இருந்து வருகின்றன.

தினை விதைத்தவன் தினை அறுத்த ஒன்றோடு மட்டுமல்ல, அவன் திருவருளும் பெற்றான் என்றால் கேட்போர் உள்ளமெல்லாம் கிளர்ந்தெழுகின்ற இன்பத்தினால் துள்ளத்தான் செய்யும்.

'பெரியான்' என்பான் ஒரு பள்ளன். அவன் தனக்குரிய விளை நிலத்தை உழுது கொண்டிருக்கிறான். அவன் முன்னே ஓர் அடியவர் வந்து நிற்கிறார்; வந்த அவ்வடியார் 'உண்ணச்சோறு வேண்டும்' என்று கேட்கிறார். பசித்தோர் முகம் பார்த்து அவர்கட்கு அன்னமிட்டு உதவ வேண்டு மென்னும் நன் மனமுடையோனாக இருக்கவேண்டும் அந்தப் 'பள்ளன்'. உடனே சோறு கொண்டு வருவதாகக் கூறி அவ்விடத்தை விட்டகன்று தன் வீட்டுக்குச் செல்கிறான். பின், தன் மனைவியோடு சோறும் நீரும் கொண்டு வந்து சேர்கின்றான். என்ன விந்தை! அவன் கண்களை அவனால் நம்பமுடியவில்லை, தினை விதைக்க இருந்த நிலம் முழுவதும் தினை விளைந்து பழுத்து அறுக்கும் வேலையொன்றோடு இருந்தது. அடியவரையும் ஆங்கு காணவில்லை; தினையோ விளைந்து கிடக்கிறது. நிலைமையைச் சொல்லிச் சொல்லி மனைவியுடன் சேர்ந்து வியப்பும் ஆர்வத்துடிப்பும் கொள்கின்றான். 'அடியவரைக் காணோமே'என்று திகைத்து திண்டாடிநிற்கிறான்.

அப்போது அருளே வடிவமான ஆண்டவன் ஆனேற்றின் மிது தோன்றுகின்ருன்; திருவருள் பாலிக்கிருன்; பள்ளனையும் அவனது மனைவியையும் சிவலோகம் சேர்ப்பிக்கின்ருன்.

'சிந்திப்பார் மனத்தான் சிவன்' என்பது அப்பமூர்த்திகளின் அருள் வாக்கு. சிந்திப்பரிய திருவடியைச் சிந்திக்க 'சிவபதம்' எய்துவது உறுதி, என்பதற்குப் பல உண்மையான வரலாறுகள் கிடைக்கின்றன. கங்கை வார்சடைக் கரந்த சிவபெருமானுக்கு அன்பராவார்களை எடை-நிறை-குணம்-குலம் ஆகியன போட்டுக் கூறினரில்லை நாவரசர்.

"புலையரேனும்-கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே" என்று அவர் பாடிய இப்பாடல் ஒன்றே போதும். 'பிறப்பு, தொழில் முதலியவற்ருல் எத்துணை உயர்வு தாழ்வுகள் உடையராயினும் அவரை அவர்க்கு இறைவனிடத்துள்ள அன்பு—தொண்டு எனும் இவற்றின் நிலை கட்கு ஏற்பக் கொள்ளுதலே மெய்ந்நெறியாகும்' என்பதே நாவரசர் பாடல் நயம். சைவத்தின் உண்மை இதனுலே விளங்கும்.

வியத்தகு நிலையில் தினைக்கதிர் விளைந்த காரணம்பற்றித் 'தினைநகர்' என்னும் பெயர் பெற்றது இத்தலம். இன்று 'தீர்த் தனகிரி' என்று மருவி வழங்குகின்றது இத்தலம். 'நீறுதாங்கிய திருநுதலானை' எனத் துவங்கும் தக்கேசிப்பண்ணில் 'திருத்தினை நகருட் சிவக் கொழுந்து' எனக் கூறுகின்ருர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். இவர் பாடிய பதிகமொன்றே இத்தலத்துக்கு உளது. பெரியான் வழிபட்ட சிவலிங்கம் அம்மன்கோவிலில் இருக்கிறது. பெரியான் – அவனுக்கு அருள் செய்ய வந்த அடியார் திரு உருவங்கள் கோயிற் சுவரில் இருக்கின்றன. இறைவனது திரு நாமம் 'திருநந்தீசுரர்; இறைவியின் திருநாமம் இளங்கொம் பன்னுள்.

"திருத்தினையூரில் திகழும் இளங் கொம்போடு
இருக்குநந்தீச்சுரன்"

என்பது உமாபதி சிவனுர் அருளிய சிவசேக்ஷத்திர சிவநாமக் கலிவெண்பா.

நடுநாட்டுத் தலங்சள் இருபத்திரண்டனுள் ஐந்தாவது தலமான திருத்தினை நகர், பரங்கிப்பேட்டை புகை வண்டி நிலையத்திலிருந்து மேற்கே ஏழாவது கல்லில் இருக்கிறது. பரங்கிப் பேட்டை யென்பது கடலூருக்கும் சிதம்பரத்துக்கும் இடையில் உள்ள ஒரு புகை வண்டி நிலையமாகும்.

தில்லையிலே மன்றுளாடியின் மலரடி போற்றி வணங்கிப் பதிகம் பாடிப் பின் தினைநகரை யடைந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

"நீறு தாங்கிய திருநுதலானை
நெற்றிக்கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னுனைக்
குற்றமில்லியைக் கற்றையஞ் சடைமேல்
ஆறு தாங்கிய அழகனை அமரர்க்
கரிய சோதியை வரி வரால் உகளும்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே"

என்று பாடுகின்றார். இப்பெருமான் இத்தலத்துக்கு எழுந்தருளிய பெருமையை அகங் குழைந்த அன்பினராய் சேக்கிழார் பெருமான் சிறப்பித்துப் பாடுகின்றார்:

"சீர்வளரும் திருத்தில்லைத் திருவீதி பணிந்து புகுந்து
ஏர்வளர் பொன்திருமன்றுள் எடுத்த சேவடி இறைஞ்சிப்
பார்வளர மறைவளர்க்கும் பதி அதனிற் பணிந்துறைவார்
போர்வளர் மேருச்சிலையார் திருத்தினை மாநகர் புகுந்தார்."

*(ஏயர் கோன்-புராணம் 167)*

---

# தாயுமானவரின் – பராபரக்கண்ணிகள்

Couplets in venerable adoration of the
Omnipotent and Omnipresent

sung by

St. THAYUMANAVAR

14

Except the Supreme Self, all need somekind of help or guidance from someone in this earthly life. Without such a help or assistance every act of us is not better done and results in futility. Amid the encircling gloom we need the "Kindly light" to lead us on. Nothing can guide, and take us to eternity, but this Divine Grace. This point is explained by a simile in this couplet by our poet-saint.

பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருள்தான் பேரும் பராபரமே.

(பொ – ரை) ஒன்றினைப் பற்றிப் படரும் பயிருக்கு அதன் கொழுந்து ஆதாரமாயும் வழியமைத்தும் உதவுவதுபோல பரிபக்குவம் அடைந்த ஆன்மாக்களுக்கு இறைவனது இன்னருளே முன்னின்று இயக்கி முத்திக்கு ஆதாரமாய் விளங்குகிறது.

Oh........Lord Supreme! The tender shoot is the very basis for the spreading creeper. It helps and leads on to its full growth (and its future) and fruitfullness; Just as, Your Grace stands before the matured soul, pilots it to Eternal Salvation

———

(தொடரும்)

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar.

# திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பர இராமலிங்க சற்குரு புலம்பற்கண்ணி*

தொகுத்தவர், திரு. P. P. துரைசாமி அவர்கள்,
கோயமுத்தூர்.

[மலர் 15, இதழ் 9-ன் தொடர்ச்சி]

கோவலூரின் கண் — குலவு நினதுருக்கொண்டு
ஆவலா யென்கனவில் — ஆளவந்த சற்குருவே. 171

சமரசமாம் பசனே — தக்கபெயர் பெற்ருய்
சமரச நாமாவளியைச் — சாற்றென்ற சற்குருவே. 172

சந்தைநுழை நாயென்னச் — சந்ததமுள் ஊண்விழைந்தே
எந்தை நினேஏத்தா — திடருழந்தேன் சற்குருவே. 173

ஒருகாலு நின்னடியார்க் — குற்றபணி செய்யாது
இருகாற் கடாவென் — றிழைத்துழன்றேன் சற்குருவே. 174

காலமெலாம் வீணிற் — கழித்துழன்றே னுயிடினும்
ஞாலமதில் நீபொறுக்க — ஞாயமுண்டென் சற்குருவே. 175

கற்பனவுங் கற்றறியேன் — கற்றவர்பா லுற்றறியேன்
அற்பனே நீயாண்ட — தருமையன்றே சற்குருவே. 176

கேள்வியொன்றுங் கேளேன் — கெடுதிவிட்டு நல்வழியில்
ஆள்வினேயில்லா வெனேயென் —ருண்டுகொள்வாய் சற்குருவே. 177

தங்குமென் குற்றமெலாந் — தள்ளிவிடிற் கொள்வதற்கே
யெங்குமிடமில்லே யென்றே — வென்னேவிட்டாய் சற்குருவே. 178

பொற்பங் கயத்தின் — புதுநல வெறுங்கவியின்
நற்பயனே நாயேற்கு — நாட்டவருள் சற்குருவே, 179

கொண்டபின்பும் குற்றம் — கூறுவரோ வென்றுன்றோர்
விண்டமொழி யெக்காலும் — வீணுமோ சற்குருவே. 180

(தொடரும்)

---

*திரு. ச. மு. கந்தசாமி பிள்ளேயவர்கள் இயற்றியது.

சிவ சிவ

# திருச்சாய்க்காட்டில் சாயாவனேசுவரர்

## தேவார நிதி—சேமவைப்பு ரூ. 30,000/-



"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்"

முதலாகிய பல திருக்கோயில்கள் இருந்தனவென்று சிலப்பதிகாரத்தில் கூறப்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்தைச் சார்ந்த தலங்களுள் ஒன்றுயதும், உபமன்னியு முனிவரும் இந்திரனது தாயும் பூசித்துப்பேறு பெற்றதும், ஆதி சேடனது நாகமணி வீசியதால் சாயாவனம் என்ற பெயர் அமைந்ததும், சம்பந்தரும் அப்பரும் பாடிய பதிகங்களையுடையதும், ஐயடிகள் காடவர்கோன் 'பூம்புகார்ச் சாய்க்காடு கைதொழு நீ சென்று'என்று பாடியதும்

"அடியார்கள் யார் எனினும் வேண்டும் யாவையும் இல்லை யென்னுதே கொடுக்கும்" இயற்பகை நாயனுர் செயற்கரிய செய்த தீரர் ஆகி அருள் பெற்ற தலமாக விளங்குவதும் ஆன சாயாவனம் எனப் பெறும் திருச்சாய்க்காடு என்னும் தலத்தில் சாயாவனேசுவரர் திருக்கோயிலில் தேவாரத் திருமுறைகளை நாடோறும் விண்ணப்பிக்கச் செய்து திருமுறைகளைப் பரப்புதற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இக்கட்டளை நிறுவப் பெற்றது. இது திருச்சாய்க்காட்டில் சாயாவனேசுவரர் தேவார நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 30,000/- (ரூபா முப்பதினுயிரம்) இது பிற்கண்டவாறு அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| 4-1/4% சென்னை சர்க்கார் லோன் 1972- | | | |
| | எம்எஸ். நெ. 549. | ரூ. | 5,000 |
| 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946- | | | |
| | எம்எஸ். நெ. 3622. | ரூ. | 13,000 |
| ஷி | எம்எஸ். நெ. 3732. | ரூ. | 12,000 |
| ஆகக் கூடுதல் | | ரூ. | 30,000 |

இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்.

3. அ. இச்சேமவைப்பினின்று கிடைக்கும் வட்டித்தொகை திருச்சாய்க்காட்டில் சாயாவனேசுவரர் திருக்கோயிலில் நாடோறும் தேவாரத் திருமுறைகளை விண்ணப்பம் செய்வார்க்கு ஊதியம் அளிக்கப் பயன் படுத்தப்பெறும்.

ஆ. நம்மால் நியமிக்கப்பெறும் ஓதுவார் ஒருவர் திருச்சாய்க்காட்டில் சாயாவனேசுவரர் திருக்கோயிலில் காலையிலும், மாலையிலும், தேவாரத்திருமுறைகளை ஓதல் வேண்டும். மார்கழி மாதத்தில் திருவாதிரைத் திருவிழா நாட்களில் திருவெம்பாவை ஓதல் வேண்டும். ஒவ்வொரு வேளையிலும் ஒரு மணி நேரத்துக்குக் குறையாமல் தேவாரம் ஓதும் திருப்பணியைச் செவ்வனே புரிதல் வேண்டும்.

இ. தேவார ஓதுவார்க்கு மாதம் ஒன்றுக்கு ரூ.70/- ரூபாய் எழுபது வீதம் சம்பளம் அளிக்கப்பெறும். வட்டி வரவுக்கு ஏற்பச் சம்பளம் கூட்டவும் குறைக்கவும் பெறும்.

ஈ. ஷி ஓதுவார் மாதந்தோறும் 27-நாட்களுக்குக் குறையாமல் பணிசெய்யின் முழுச்சம்பளம் அளிக்கப்பெறும். தேவாரப்பணிபுரிந்ததாகத் திருச்சாய்க்காடு சாயாவனேசுரர் தேவஸ்தான எக்ஸிகூடிவ் ஆபீசர் அல்லது மானேஜிங் டிரஸ்டி அவர்களிடம் இருந்து அத்தாட்சி பெற்று நமக்கு அனுப்பின் ஷி ஓதுவார்க்குரிய சம்பளம் மணியார்டர் வழி ஷி ஓதுவார்க்கு

அனுப்பப்பெற்றுவரும். தவிர்க்கமுடியாத காரணத்தை முன்னிட்டு பணி செய்யாதநாட்களுக்கு முன்னதாகவே நம்மிடத்தில் அனுமதி பெறுதல் வேண்டும்.

உ. தேவாரம் விண்ணப்பிக்கும் ஓதுவாரை நியமிக்கவும் நீக்கவும் நமக்கும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களுக்குமே உரிமையுண்டு.

4. தேவார ஓதுவார்க்குச் சம்பளம் அளித்தபிறகு எஞ்சிய தொகை ஷெ ஓதுவாருடைய தகுதி, சீலம், பணிபுரியும் திறமை முதலியவற்றை நோக்கி நம் விருப்பம் போல் ஊதியத்தை அதிகரிக்கப்பயன்படுத்தலாம். சில்லறைச் செலவுகள் போக எஞ்சியுள்ள தொகை மூலதனத்தோடு சேர்க்கப்பெறும்.

5. இத் தொகை வேறு எம்முறையிலும் பயன்படுத்தப்பெற மாட்டாது. இச் சேமவைப்பு நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும். இச் சேமவைப்புக்குரிய கடன்தாள்கள் திரும்பியளிக்கப்பெறில் அதிகவட்டி வரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலிடு செய்யப்பெற்றுவரும்.

"சாய்க்காட்டான் தாள்நிழற்கீழ் ஓங்கினூர் ஓங்கினூர்"

---

Note: The creation of this endowment has been approved by the Commissioner, H. R. & C. E., Madras in his D. Dis. 2497/64 dated 24-6-1964.

திருப்பனந்தாள்.
Dated 30-6-1964. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvidamarudhur Sub-Registrar's office on 2-7-1964 as No. 47 of 1964 of Book 4, volume 52, pages 17 to 21.

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 10436 & 37 | ஸ்ரீ அம்பலவாண தேசிகர் கலம்பகம் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 10438 | ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழ் | ,, ,, |
| 10439 | நவரத்தினங்கள் | ,, ,, |
| 10440 | சேயம் முருகன் பிள்ளைத் தமிழ் | ,, ,, |
| 10441 & 42 | கவி ராக்ஷஸ ஸ்ரீகச்சியப்ப முனிவர் பிரபந்தங்கள் | ,, ,, |
| 10443 | முத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை | ,, ,, |
| 10444 | ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் மாலை (குறிப்புரையுடன்) | ,, ,, |
| 10445 | சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் கலித்துறை முதலியன | ,, ,, |
| 10446 | திருவாவடுதுறை ஆதீன வரலாறு | ,, ,, |
| 10447 | துறைசைப்புராணம் | ,, ,, |
| 10448 | மெய்கண்டார் சித்தாந்தம் | ,, ,, |
| 10449 | திருவாதவூரர் சிவபோத வாழ்க்கை | ,, ,, |
| 10450 | துறைசைச் சுப்பிரமணிய தேசிகர் மும்மணிக்கோவை | ,, ,, |
| 10451 | இரத்தின சபாபதி மாலை | ,, ,, |
| 10452 | பண்டார சாத்திரம் (சித்தாந்தப்பஃறொடை) | ,, ,, |
| 10453 | திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி | ,, ,, |

| | | | |
|---|---|---|---|
| 10454 | பண்டார சாத்திரம் உபதேசப்பஃறொடை பஞ்சாக்கரப் பஃறொடை | திருவாவடுதுறை | ஆதீனம் |
| 10455 | நவமணிகள் | ,, | ,, |
| 10456 to 59 | திருமந்திர மாநாட்டு மலர் | ,, | ,, |
| 10460 | ஹிந்து மதமும் – கிறிஸ்தவ மதமும் | ,, | ,, |
| 10461 | கோளறு திருப்பதிகம் | ,, | ,, |
| 10462 | சிவஞான போதம் (பன்னிரு சூத்திரப்பதவுரை) | ,, | ,, |
| 10463 | தில்லைக்கூத்தன் | ,, | ,, |
| 10464 | இலக்கியக் கலை | கழக | வெளியீடு |
| 10465 | மேற்கோள் விளக்கக் கதை அகர வரிசை 2-ம் பகுதி | ,, | ,, |
| 10466 | தமிழ் வரலாறு – முதற் பாகம் | ,, | ,, |
| 10467 | விநாயக கவசம், செல்வத்திறவுகோல், மூலமும், உரையும் | ,, | ,, |
| 10468 | மொழி நூல் | ,, | ,, |
| 10469 | தனிப்பாடல் திரட்டு, உரை குறிப்புக்களுடன் முதற்பகுதி | ,, | ,, |
| 10470 | சட்டவியல் | ,, | ,, |
| 10471 | அக நானூறு மணிமிடை பவளம் | ,, | ,, |
| 10472 | சிறுபாணாற்றுப் படை | ,, | ,, |

---

(தொடரும்)

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| எண் | நூல் | | ரூ. | ந.பை. |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | — | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 | 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 | 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 | 25 |
| 11* | பதினோராந்திருமுறை ,, ,, | ... | 1 | 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 | 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு (அச்சில்) | ... | | |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | ... | 1 | 25 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 | 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 | 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 | 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 | 50 |
| 22 | கந்தபுராணம் உரைநடை | ... | 3 | 00 |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 | 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 | 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் - உரையும் | ... | 0 | 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 06 |
| 30 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 31 | திருக்குறள் – பொருட்பால் . | ... | 2 | 50 |
| 32 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 | 00 |
| | ஐ 30, 31, 32 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |
| 33 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 | 75 |
| 34 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 | 13 |
| 35 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 | 75 |
| 36 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் | ... | 0 | 37 |

| | | |
|---|---|---|
| 37 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்[illegible] மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- [illegible]ட்சியம்மை குறம் | ... 2 75 |
| 38 | [illegible] நான்மணிமாலை - முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 39 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 40 | பண்டார மும்மணிக் கோவை - காசிக் கலம்பகம் - சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 41 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 42 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 43 | பெரியபுராணம் - உரைநடை | ... 2 00 |
| 44 | திருவிளையாடற் புராணம் - உரைநடை | ... 2 25 |
| 45 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 46 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 47 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 48 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 49 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 50 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 51 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... 1 20 |
| 52 | அபிராமி அந்தாதி - தெளிவுரையுடன் | ... 0 50 |
| 53 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |
| 54 | கந்தரநுபூதி-தெளிவுரையுடன் | ... 0 35 |
| 55 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... 0 10 |
| 56 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... 0 10 |
| 57 | பழமொழித்திருமுறை | ... 0 25 |
| 58 | திருவாரூர் நான்மணிமாலை | ... 0 50 |
| 59 | Hymns and Proverbs | ... 0 30 |
| 60 | திருத்தொண்டர் புராணசாரம் | ... 0 40 |
| 61 | அப்பர்விழா வெளியீடு | ... 0 25 |
| 62 | நவக்கிரகமாண்பு | ... 0 25 |
| 63 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் | ... 0 30 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், "யோகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிட்ட பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 49, 50, 51) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.